*Photos taken during the visit of Justice E.S. Venkataramaiah Supreme Court Chief Justice to Tirumala on July 1.*









அவனு மிவனு முவனும் மற்றும்பர்
அவனு மவனென் றிராதே—அவனும்
அவனே யெனத் தெளிந்து கண்ணனுக்கே தீர்ந்தால்
அவனே யெனேலு மாம்

*ஸர்வேசவரனானவன் துர்லபனாயிருப்பனோ ? ஸுலபனாயிருப்பனோ? மத்யஸ்தனாயிருப்பனோ ? அல்லது மிகவும் உயர்ந்தவனாய் எட்டாதே யிருப்பனோ ? என்றிப்படி பலவகையாக சந்தேகங்கள கொண்டிராமல் எம்பெருமானுடைய ஸ்வரூபமே ஸௌலப்யம் என்று தெளிவாகத்தெரிந்துகொண்டு, அந்த ஸௌலப்யத்தை கிருஷ்ணாவதார முகத்தாலே விளங்கக் காட்டிய அவனுக்கே ஆட்பட்டால், அப்பெருமானே எல்லா உறவுமுறையுமாவான்.*

— பெரிய திருவந்தாதி —36

# ஸப்தகிரி

## ஆகஸ்ட் - 1989


தனிப்பிரதி ரூ 1 — மலர் 20

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 3


## உள்ளுறை

பக்கம்



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை. ஸ்ரீ கிருஷ்ணர்
பின்னட்டை ஸ்ரீ வரலக்ஷ்மி
—ஓவியர் சசி

முதல் உள்அட்டை திருமலையில் இந்திய உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி திரு. ஈ. எஸ். வெங்கடராமய்யா அவர்கள்.

2-வது உள்அட்டை திருமலையில் இந்தியத் துணைக்குடியரசுத் தலைவர் டாக்டர், சங்கர் தயாள் சர்மா அவர்கள்,


சிறப்பாசிரியர் :
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர் :
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.




Sasi

# உங்களுடன் . . . .

''எப்பொழுதெல்லாம் தாமம அழிககப்பட்டு, தீவினைகள் பெருகுகின்றனவோ அப்பொழுதெல்லாம் தர்மத தைககாத்திட, தீயோரை அழிததிட நான அவனியில் அவதாரம் கொள்கின்றேன்'' என்று பாற்கடல் நாயகன தானே வாய் திறந்து தன அவதார நோக்கததினைக் கூறியது கிருஷ்ணவதாரத்தில்தான். ஏனைய முன் அவதாரங்களின்போதும் அசுர சக்தி அழிககப்படடதும, தாமம காக்கப்பட்டதும நாம் அறிந்து தெளியும் உணமைதான். எனினும் கிருஷ்ணவதாரத்தின போது வெளிப்படையாகக் கூறியது, துவாபரயுகத்தின இறுதிக் கட்டத்தில நடைபெறும் வஞ்சகச் செயல்களையும், கொலை வெறி காட்சிகளையும் காட்டிடும் காலத்தின் கொடுமையினை எடுத்துக காட்டவும், அதர்மம் அதர்மத்தாலேயே அழிக்கப்படும எனபதை அறிவிக்கவேயாகும். தன உறுதி மொழிக்கு ஒப்ப ''வாழு, வாழவிடு'' எனும் வாழ்க்கையின் அடிப்படை அறிவுரையை உணர்ததிடும் வகையில, கண்ணன் நேரிடையாகவும், மறைமுகமாகவும் இருந்து காட்சிகளை நடத்திக் காட்டி வாழ்க்கையை எவ்வாறு மேறகொள்ள வேண்டும். பிரசசனைகளை எவ்வாறு எதிர்கொள்ள வேண்டும், எல்லா செய்கைகளுககும பினனும் தர்மம, கடமை, சேவை, தியாகம் எனும் அறப்பண்புகள் விளங்கிட வேண்டும என்பனவறறை விளக்கிக காட்டுகினறான்.

''க்ருஷ்ணஸது பகவாந் ஸவயம'' எனும பாகவத புராணக கூற்றுப்படி நிர்க்குண பிரமமமான அப்பரமனே கிருஷணனாக அவதாரம் மேறகொண்டு, ''ஸாக்ஷாத் மந்மத மந்மத:'' என்றும் ''மதுரம் மதுரம் மதுரம்'' என்றும் அடியார்கள உருகும் வணணம் தன் புற அழகால, தன் லீலா விநோதங்களின்மூலம் தன் தெய்வீகத் தன்மையைக் காட்டி, பின்னர் மஹாபாரத நிகழசசிகளின்போது ''யதோ வாசோ நிவாத்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ'' எனறு வேதங்களாலும அவனை அறிய முடியாத குணகடந்தவனாய், தன ஸௌசீல்யத்தாலும, ஸௌலப்யத்தாலும தாய், தநதை, ஆசாாயன, காரணன், காரகன, இரக்ஷகன எனும் நிலைகளில உலக மக்களுக்கு நலவழி காட்டியவன கண்ணனாவான ''அஹம க்ருத்ஸநஸய ஜகத: ப்ரபவ: பிரளயஸததா'' எனும்படி உலகத்தின் ஆக்கம், வளர்த்தல், அழித்தல் நாயகனான அவ் 'இடைசசாதினன்' திட்டம போட்டு, எதிரிகளை எடை போட்டு ''அதர்மத்தின் அழிவு அவ்வளவு பயங்கரமானதா'' எனறு தர்மமே அஞ்சிடும வகையில காயகளை நகர்த்திக் காட்சிகளை நடத்திய முறை, 'தலைவன்' எனும் பதவிக்கு அவன் காடடிட்ட அரசியல் இலககணமாகும்.

பயன் கருதாத, சேவை கலந்த கருமம்தான் பக்திக்கும், பின் ஞானத்திற்கும், இறுதியில் பேரின்பத்திறகும இட்டுச செல்லும் எனும் பேருண்மையினைத்தான கிருஷ்ணவதாரத்தில கண்ணன் விளககுகின்றான். ''இராமனது மெய்யும, கிருஷ்ணனது பொய்யும் நமக்குத் தஞ்சம்'' எனும் வைணவப் பேச்சுப்படி கணணனது சேஷ்டிதஙகள், காலத்தின கட்டளையால நடைபெறும கடுமைகளைத் தடுததுத் தீர்த்திடும செய்கைகளாக அமைந்துள்ளன. ''ஜன் மாந்தர ஸஹஸ ரேஷு தபோத்யான ஸமாதிபி. நராணும் க்ஷீண பாபானும க்ருஷ்ணே பகதி; ப்ரஜாயதே'' எனும்படி கண்ணனருளால் ஒன்றாலேயே நம் பாவஙகள யாவறறையும களைந்திடலாம் எனும் உறுதிமொழிககு வலிமை சேர்த்திடும் வகையில தர்மம் எனும் அஸதிவாரததினமீது அவனுடைய திருவிளையாடலகள அமைநதுள்ளன.

ஆணவம் அயர்ந்திடும்போது, புலன்கள் உறங்கிடும்போது, மனதில் இறையொளி வீசிடும என்பதற்கிணங்க கமசனும், காவலர்களும உறங்கிட்ட வேளையில, அஞ்ஞானம் எனும நடு இரவில், பேரொளி என பேரறிவாக பரமன இப புவியில் புது அவதாரம் எடுததான். கண்ணன குழந்தையாக இருந்தபோது தன் புற அழகால் உயிாகளின் ஆன்மாவைத் தட்டி எழுப்பினான். பினனர் மகாபாரதப் போா சூழ்நிலையின்போது அககணணனே அவ்ஆனமா உயர்வு பெறத் தன்னலங்கருதா தியாகம, பயன் கருதா கடமை ஆற்றுதலேயாகும என்பதை பல கதைமாந்தர்களின்மூலம் அறிவுறுத்தினான். அதர்மத்தை வெல்ல பலமுறை நேர்வழியே செலலாது. விதிவழி செயல்கள் நடந்திட வழிவகுத்து ஒரு சூத்ர தாரியாகவே கணணன செயலபடுகினறான. ஒப்பறறத் தலைவாகள பலருடைய அழிவு, அது அவர்களே ஆரமபக் காலத்து விதிததுக கொண்ட அவர்தம வினைகளுக்கு விலையாகும்.

அரசியல் ஆசானான பீஷமா தன மரணததைத் தான விருமபும வேளையில பெற்றாலும், அமமரணம தன பேரனாலேயே பெறும அவலம, ஒரு காலதது பொதுச சபையில ஒரு பெணணின பண்புகநக களங்கம் ஏறபட்டபோது வாளா இருந்ததாலாகும. போாக்களையில போபோன துரோணா நிராயுதபாணியாகக கொலலப்பட்ட பரிதாபம், கற்பித தவனே கருவியை கையிலேநதியதாலும, விதிமீறி பிரம்மாஸ்ததிரததை ஏவி பல உயிர்களை அழிததாலாகும். உபபாணடவர்களை அசுவத்தாமன அழிதத செயகையும பீமனின கையில துச்சாதனன் பெறற முடிவும மனிதன் மிருகமாக மாறினால ஏறபடும விளைவுகளுக்கு சில உதாரணங்களாகும். பதம வியூகததில சிககி இளமையிலேயே இன்னுயிா ஈநத அபிமனயுவின முடிவு, குறைநத ஞானமும அவசர முடிவும அழிவுக்கே இட்டுச செலலும என்பதைக கூறும். ''இனறு போய் நாளை வா'' எனும் திரேதாயுக அறிவுரை துவாபரயுகத்தில் 'இனறு இலலையெனறால் இனி என்றும் இல்லை' எனும்படி இரவு பகல பாராது, விதிமீறி பல உயிாகள அழியும கொலை வெறிக்கு மாறியது மனிதனுள புகுந்த அசை, பதவி, புகழ எனும மயக்கமே காரணமாகும்.

ஆகவே வெண்ணெய்த திருடி உண்டது முதல், ஒரு வேடனின வில்லுக்கு இலக்கானதுவரை தனது ஒவ்வொரு செய்கையினமூலம் பல தத்துவ உணமைகளைப் பறைசாறறி, அதர்மம அழிய தாமம் பினபறறும் வழிமுறைகள் விபரீதமாக இருக்கும் என்பதை அறிவுறுத்தி, அதுபோது அதர்மத்தின அழிவு அஞ்சிடும வகையில அமையும் என்பதை எச்சரித்து, தன் அவதாரத்தின்மூலம் கலியுகத்திறகு ஓர் அபாயச சங்கினை ஊதினான கண்ணன. இதனை மனதிற் கொண்டு நம் சிந்தனையையும், செயலையும் சற்றே புனிதமாக்கிக் கொணடால, அதுவே நாம் கொண்டாடும் 'கிருஷ்ண ஜெயந்திக்கு'' சற்றே பொருளிருக்கும.

# செய்திச் சுருக்கம்

திருமலையில் மதுபானங்கள் அருந்ுதல், புகைப்பிடித்தல் ஆகியன தடை செய்யப்பட்டுள்ளதால் திருப்பதி அலிபிரி சுங்கச்சாவடியிலும், திருமலையிலும் தீவிரமான கண்காணிப்புக் கட்டுப்பாடுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இதன் காரணமாக அண்மையில் ஆந்திர அரசு பேருந்தில் ரூ. 7000 பெறுமான மதுபானங்களைக் கடத்தியதன் பேரில் நபர் ஒருவர் கைது செய்யப்பட்டுள்ளார்.

ஓம் ஓம் ஓம்

இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர் சங்கர்தயாள் சர்மா அவர்கள் தம் துணைவியார் ஸ்ரீமதி. விமலா சர்மா அவர்களுடன் 9-7-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார். அன்று கோயிலில் கோயில் மரியாதைகளுடன் டாக்டர். சர்மா அவர்கள் தி. தி. தே. உயர் அலுவலர்களால் எதிர்கொள்ளப்பட்டார். 10-7-89 அன்று திருமலையில் ஸ்ரீ ராகவேந்திரா மடத்தினைத் திறந்து வைத்தார். இதுபோது ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சியின்போது மந்த்ராலயம் ஸ்ரீ ராகவேந்திர மடத்தின் பீடாதிபதி ஸ்ரீ சுஷமீந்திர தீர்த்தா சுவாமிஜி அவர்களால் டாக்டர் சர்மா அவர்கள் வரவேற்கப்பட்டார். ஸ்ரீ சுவாமிஜியின் மடத்தில் ஸ்ரீ மூல ராமர், ஸ்ரீ திக்விஜய ராமர், ஸ்ரீ ஜெயராமர் ஆகியோருக்குச் சிறப்பு வழிபாடு பூசைகள் நடைபெற்றன. இச்சமய விழாவிற்கு ஆந்திர மாநில நீர்ப்பாசனத்துறை அமைச்சர் திரு. பி. நாகிரெட்டி, அறநிலையத்துறை அமைச்சர் திரு. கே. அப்பல நாயுடு, மற்றும் பல அரசியல் பிரமுகர்களும் வருகை புரிந்தனர்.

திருமலை பாபநாசம் அணைக்கட்டிற்கு அருகில் சுமார் 10 ஏக்கர் நிலப்பரப்பில் தி.தி. தேவஸ்தானத்தாரால் மேற்கொள்ளப்படவிருக்கும் மூலிகை வனம் ஒன்றினை, ஸ்ரீ பாலராஜ மகரிஷி அவர்கள் சில மூலிகைச் செடிகளை நட்டதின் மூலம் திறந்து வைத்தார். இதுபோது 93 வகைகளைச் சார்ந்த சுமார் 368 மூலிகைச் செடிகள் நடப்பட்டன. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சியின் போது தி.தி.தே. வனத்துறை தலைமைப் பாதுகாப்பு அலுவலர் திரு ஜானகிராம நாயுடு, தோட்டத் துறைத் தலைவர் திரு. தம்மண்ணா, தலைமை மருத்துவ அலுவலர் திருமதி எஸ். ராஜ்யலக்ஷ்மி, திருப்பதி ஆயுர்வேத கல்லூரி முதல்வர் திரு. எஸ். பி. தீக்ஷித் ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர்.

ஆயுர்வேத ஆசார்யா வைத்திய விஷாரதா டாக்டர். பிரபாகர் அவர்கள் மறைந்தது அடுத்து அவரது மனைவியார் டாக்டர். ஜோதி பிரபாகர் அவர்கள் தங்களிடமிருந்த ஆயுர்வேதம் பற்றிய 49 நூல்களையும், பல இலட்சம் பெறுமான மருந்துகளையும், தி. தி தேவஸ்தானத்திற்கு இலவசமாக வழங்கியுள்ளார். இம்மருந்துகளில் சில 100 ஆண்டுகளுக்கு முன்பே செய்யப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது. இம்மருத்துவ தம்பதியினரின் மூதாதையினர் வெங்கடகிரி, பொப்பிலி, பீடாபுரம், நிஜாம், மைசூர் ஆகிய சமஸ்தானங்களில் அரசு வைத்தியர்களாகப் பணிபுரிந்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

ஆந்திர மாநில அறநிலையத்துறையின் புதிய ஆணையரான திரு. ஆர். பார்த்தசாரதி அவர்கள் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுவின் அலுவல் சார்பு உறுப்பினராக நியமிக்கப்பட்டுள்ளார்.

அண்மையில் கர்நாடக மாநில தர்மசாலாவின் தர்மாதிகாரி ஸ்ரீ வீரேந்திர ஹெக்டே அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார்.

திருமலைக் கோயில் பிரஸாதமான லட்டுகளைப் பெற யாத்திரிகர்கள் நீண்ட நேரம் காத்திருக்க நேருவதால் இதனைத் தவிர்த்திடும் வகையில் லட்டுகளை வழங்க டோக்கன் முறையினை அமுல்படுத்த தி.தி.தே. மேலாண்மை கருதி வருவதாக தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார் அவர்கள் திருமலையில் பத்திரிகையாளர் கூட்டம் ஒன்றில் கூறியுள்ளார்.

திருமலைக் கோயில் பேஷ்காரராக திரு. ஆர். ராகவேந்திரராவ் அவர்கள் அண்மையில் மேலாண்மையால் நியமிக்கப்பட்டுள்ளார். ★

## சந்தாதாரர்களுக்கு....

30-9-89—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 46 | 554A | 561 | 566 | 567 | 696 | 819 | 1962 | 1993 | 2011 | 3133 | 3140 |
| 3189 | 3190 | 3225 | 3226 | 3245 | 3285 | 3300 | 3302 | 3305 | 3307 | | |
| 3310 | 3318 | 3321 | 3326 | 3333 | 3334 | 3336 | 3339 | 3340 | 3341 | | |
| 3343 | 3344 | 3346 | 3348 | 3349 | 3350 | 3352 | 3369 | 3375 | 3376 | | |
| 3277 | 3388 | 3389 | 3390 | 3393 | 3395 | 3403 | 3408 | 3469 | 4005 | | |
| 4361 | 4445 | 4446 | 4447 | 4448 | 4449 | 4450 | 4451 | 4452 | 4453 | | |
| 4454 | 4455 | 4456 | 4457 | 4458 | 4459 | 4460 | 4461 | 4462 | 4463 | | |
| 4464 | 4465 | 3468 | 4469 | 4570 | 4471 | 4472 | 4473 | 4474 | 4475 | | |
| 4476 | 4477 | 4480 | 4482 | 4483 | 4690 | 4879 | | | | | |

# ★ கண்ணன் பிறந்தான் ★



"கண்ணன் பிறந்தான்—எங்கள
கண்ணன் பிறந்தான்—இந்தக்
காற்றதையெட்டுத்திசையிலுங் கூறிடும்
திண்ணமுடையான்—மணி
வண்ணமுடையான்—உயர்
தேவர் தலைவன் புவிமிசைத்
தோன்றினன்"

என்று பகவான் கண்ணனாக உலகில் அவதாரம் செய்த செய்தியை மிக்க களிப்போடு பாடியுள்ளார். எங்கள் பொருநை நாட்டுப் புலவர் பெருமானாகிய சுப்பிரமணிய பாரதியார்.

"எங்கள் கண்ணன் பிறந்தான்" என்ற கவிஞர் வாசகத்தில்தான் எவ்வளவு கனிவும், உரிமையும் பாசமும் தொக்கி நிற்கின்றன! நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார் ஸ்ரீஆண்டாள் போன்றோரின் ஸ்ரீ கிருஷ்ண பக்திக்கு நிகராகச் சொல்லக் கூடியது நம் தேசியக் கவி பாரதியாரின் கிருஷ்ண பக்தி. பாரதியாரின் முப்பெரும் பாடல்களில் ஒன்றாகத் திகழ்வது கண்ணன் பாட்டு.

பாஞ்சாலி சபதத்திலும் கண்ணன் பெருமையை அதியற்புதமாகப் பாடியுள்ளார் கவிஞர்.

"வையகம் காத்திடுவாய்—கண்ணா!
மணிவண்ணா என்றன் மனச்சுடரே
ஐய நின்பத மலரே—சரண்
ஹரி, ஹரி, ஹரி, ஹரி, ஹரி ஹரி!
என்றான்"

என்று கண்ணனைத் துதித்து பாஞ்சாலி துச்சாதனன் துகில் உரிய வரும் போது பாடியுள்ளது நம் உள்ளத்தை நெகிழச் செய்து விடுகின்றதன்றோ!

---

## சன்மிஷ்டை

---

கண்ணனும் கடவுளை இப்படி நம்பி தஞ்சமடைந்தோர் கைவிடப்பட்டதும் உண்டா?

"கண்ணபிரானருளால்—தம்பி
கழறறிடக்கழற்றிடத் துணிபுதிதாய்
வண்ணப் பொற்சேலைகளாம்—அவை
வளர்ந்தன, வளர்ந்தன,
வளர்ந்தனவே"

துன்மார்க்கனது ஈனச் செய்கையிலிருந்து துருபதன் மகள் மானம், கண்ணன் அருளால் இப்படிக் காப்பாற்றப்படுவதைப் படிக்கும்போது நாமும் நம்மையறியாமல் அவனது அடியிணைகளை இறைஞ்சும்படி செய்து விடுகிறார் கவி!

"கரு நிறங்கொண்டு பாற்கடல் மிசை கிடப்போன்" என்ற மஹா

விஷ்ணுவைப பாடுகிறுர் பாரதியார். இந்தக் கருமை நிற அண்ணலே கண ணுக அவதாரம் செய்கிருா. ஸ்ரீ கண்ணனின் அவதார தினத் தையே ஸ்ரீ ஜெயந்தி என்று அனபு டன அழைத்து களிப்புடன ஆணடு தோறும கொணடாடி வருகிறோம.



### இடைக்குலம்

ஸ்ரீ ராமச்சந்திர மூாததியைப போல கணணன் அரச குலததில பிறக்கவில்லை, சாமானிய இடைக குலத்திலேயே பிறந்தான.

" அறிவொனறுமிலலாத ஆயககுலநது
உன தனனைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம
யாமுடையோம "

எனறு திருப்பாவையில் ஆய்ககுலம செய்த புண்ணியததைப் பாடியுள ளார் ஸ்ரீ ஆண்டாள்.

" எங்கிருந்தோ வநதான இடைச்சாதி"
நான என்றுள

" மாடு கன்று மேய்த்திடுவேன்
மக்களை நான காத்திடுவேன "

எனறு பாரதியார் "கணணன் என சேவகன" என்று பாடலில் பாடி யுள்ளதும நாம் சிந்தித்தற்குரியது.

### கண்ணனும் வெண்ணெயும

கண்ணனுக்கு வெண்ணெ என்றுல் மிகவும பிரியம். அதை அவன் திரு டியும் தினறுன. அதறகாக வசவு களும அடியும் பெற்றுன் இதனுலேயே அவனுக்கு 'நவநீத கிருஷ்ணன்' என கிற பெயர் ஏறபட்டது.

நவநீதம எனறுல " காலைப் பசும பாலை உறை குததி, மாலையில் அதில் எடுககும் வெணணெய் " எனறு பொருள. இதில நெய் எப்படி வெணணெய்க்குள அடங்கியிருக் கிறதோ, அதே மாதிரி இதில் அநேக கருத்துக்கள் அடக்கம். அகனியில் ஆஹுதி செய்வதற்காகவே — நல்ல சுததமான நெய் கிடைப்பதற் காகவே பசு அவசியம என்று கருதப் பட்டது.

பசு தரும பால் சுத்த வெளுப்பு. அதைக் காயச்சி உறை குத்துவதால் அது தயிா ஆகிறது. தயிருக்குள் மோர், வெணணெய், நெய் மூன்றும் அடஙகியுள்ளன. ஒவ்வொன்றை யும தனித்தனியே பக்குவப்படுத்தி ஞல்தான் காண முடியும அது போல நம் முன்னேயுள்ள இறைவ னைக் காண நல்ல பக்குவம் வேணடும்.

தயிரிலிருநது வெண்ணெயை உருட்டி எடுப்பது போல இறை வனைக கடைந்தெடுக்க வேணடு மெனற இபபரம இரகசியத்தை உப தேசிக்கவே கண்ணன கையில் மததுக கொணடு தயிரையும் வெணணெயை யும் விரும்பினுன் போலும்!

கீதையை உபதேசித்த கணணன் பசுக்களைப் போற்றுவதன மூலம் நமககு எளிதில உபதேசிககும் தத்து வம் வருமாறு:- பசு என்றுல் ஒன றும் அறியாத ஜீவன. சைவ சித்தாந் ததில பதி, பசு, பாசம் இவைகளில் " பசு " மக்களையே குறிககிறது என பர். பசுககளைப பராமரித்து அவற் றின பாலை எப்படிப பயனபடுத்தி நல்ல பலனைப் பெறுகிறோமோ அது போலவே உள்ளத்தைப் பணபடுத்தி இறைவன அருளைப் பெற வேண்டும்.

பால் என்றுல் உள்ளம். பக்தி என் னும தீயில அதைக் காய்ச்ச வேண் டும். சாநதத்தைக கொண்டு உறை குத்தித் தயிராகக வேண்டும். விசா ரம், ஏகாகர சிந்தை எனற மத்தைக கொணடு தயிரைக் கடைந்தால் அருள் எனகிற வெண்ணை கிடைக்கும.

இந்த வேதாந்த அர்ததம் ஒருபுற மிருககட்டும. ஒவ்வொரு கோபியும் தன வீட்டில் கண்ணன் வநது வெண்ணை திருட வேண்டும் என்று விரும்புவாளாம். தயிர்பபானையைக கவிழதது, கொட்டிய தயிரில் காலை வைத்து கண்ணன நடந்து போன அடிச்சுவடுகளைக் காட்டவே, ஒவ் வொரு வீட்டிலும் இழை கோலததில கணணனின அடிச்சுவடுகள - வாசல் புறத்திலிருந்து உள்புறம பூஜை அறை வரையில போடப்படுகினறன.

### குழநதையும தெயவமும

"குழந்தையும் தெய்வமும் கொண டாடும் இடத்திலே" எனபார்கள. கணணனையும் முருகனையும் குழந்

தைப் பருவத்திலிருந்தே வழிபட்டவர்கள் தமிழர்கள். பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தைக் கடவுளாகவே போற்றி மகிழ்ந்தவர். இவ்விளம் பருவத்தில் அவனது அழகு, அவனைத் தாலாட்டுதல், அம்புலியை விளையாட அழைத்தல், கைகொட்டிச் சிரித்தல், தட்டுண்டு தடுமாறி நடத்தல் முதலியவைகளைக் கேட்போர் மனம் உருகும்படி பெரியாழ்வார் கவிதைகளில் பாடியிருக்கிறார்.

தெய்வ வரலாறுகளில் கிருஷ்ணன் ராதை இவர்களின் காதல் முக்கிய இடம் பெறுகின்றன. இவர்கள் இருவரும் நடத்திய நாட்டியம் "ராசக்கிரீடை" என்பது. இந்நாட்டியத்தில் அமைந்த காதற் பாட்டுக்கள் மகாராஷ்டிர மொழியில் மிகப் பிரசித்தமானவை. இந்த ராதையைப் பற்றி வடநாட்டில்தான் அதிக பிரபலம். தென்னாட்டில் கண்ணனின் காதலுக்குரியவளானவள் நப்பின்னைப் பிராட்டி.

ஆண்டாள் மிக அருமையான காதற் பாட்டுகளைப் பாடியிருக்கிறார். இக்காதற் கவிதைகளைப் பாடத் தொடங்கியவர் பெரியாழ்வார் என்றே கூறவேண்டும். பெரியாழ்வாரும் ஆண்டாளும்தான் கண்ணன் சரித்திரம் தமிழ்நாட்டில் பரக்க வழங்குவதற்குக் காரணமானவர்கள்

**கண்ணனின் லீலைகள்**

கண்ணனின் லீலைகள் குறித்து ஜயதேவர் "கீத கோவிந்தம்" என்ற ஒப்பற்ற செய்யுளைச்செய்திருக்கிறார். ராதா—கிருஷ்ண லீலைகள் சாதாரணமாகக் கருதும் சரீர சுகத்தைப் பற்றியதல்ல: இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பை இச்சரிதம் வெளியிடுகின்றது.

கண்ணன் சரிதம் போல நம் மனதைக் கவரக் கூடிய வேறு சரிதம் எதுவும் இல்லை. நாம் அவனைத் தெய்வமாகத் தொழுகிறோம் என்றால் அவனிடம் தெய்வத் தன்மை முற்றிலும் விளங்குகிறது. அவனிடமுள்ள குறைகள் மக்கள் இனத்திற்குரிய குறைகள். இக்குறைகளே நாம் அவனை அன்பு செய்யும்படி நம்மைத் தூண்டுகின்றன.

"வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுவார்களா?" என்று சொல்லுவார்கள். அவன் "உள்ளத்தில் உள்ளான்படி, அதை நாம் உணரவேண்டுமடி!" என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பாடியுள்ளது போல நாம் அந்த உண்மையை உணர வேண்டும்.

"கண்ணன் திருவடி எண்ணுக! மனமே
திண்ணம் அழியா வண்ணம் தருமே
தருமே நிதியும் பெருமை புகழும்
கருமா மேனிப் பெருமானிங்கே"

என்று மகாகவி பாரதியார் பாடியுள்ளபடி கண்ணன் என்னும் கருந்தெய்வத்தின் திருவடிகளை துதித்து வற்றாத நிதியும், பெருமையும், புகழும் பெற இந்த ஸ்ரீ ஜெயந்தி நாளை—கண்ணன் பிறந்த தினத்தை மகோற்சவமாகக் கொண்டாடுவோமாக!



## தமிழே முருகன்

தமிழ் என்றும் இளமை மாறாதது. முருகக் கடவுளும் என்றும் அகலாத இளமைக்காரன் என்றும் இளையான். தமிழ் வேறு, முருகன் வேறு இல்லை.

"ஷட் வக்த்ரம் த்வாதச புஜம்
அஷ்டாதச விலோசனம்
ரூபம அங்கீக்ருதம்
சுபம லோகா நாம"

உருவமில்லாத அருட்பெருஞ்ஜோதி ஆண்டவன், ஆறுமுகங்கள் பன்னிரெண்டு தோள்கள் பதினெட்டுக் கண்கள் கொண்ட இந்த அருளுருவத்தை உலகம் உய்யும் பொருட்டு எடுத்துக் கொண்டான் என்பது இதன் பொருள்.

எனவே முருகவேளுடைய பதினெட்டுக் கண்களே போல் தமிழ் மெய்யெழுத்துக்கள் பதினெட்டு என நின்றது.

| | |
|---|---|
| முருகவேளுக்கு முகங்கள் | 6 |
| தமிழ இனம் | 6 |

வல்லினம் ஆறு, மெல்லினம் ஆறு, இடையினம் ஆறு.

முருகவேளுடைய திருக்கரத்தில் உள்ள வேல வேறு எந்த தெய்வத்திற்கும் இல்லாத சிறப்புடைய ஆயுதம். வேல் என்றே மக்கட்குப் பெயர் இடுவது மரபு. தங்கவேல், கதிரவேல், வஜ்ஜிரவேல், முத்துவேல், சக்திவேல், சிங்காரவேல், வடிவேல, வெற்றிவேல முதலிய பெயர்களை மக்களுக்கு இடுவதைக் காண்க. இவ்வாறு வேறு தேவர்களின் ஆயுதங்களின் நாமங்களை இடுவதில்லை.

வேறு எந்த மொழியிலும் இல்லாத ஆயுதம் தமிழுக்கு உண்டு.

வேல் இச்சை, கிரியை, ஞானம் என்ற மூன்று தன்மையை உடையது. ஆயுதம் மூன்று (ஃ) புள்ளிகளை உடையது.

| முருகனுக்கு: | | தமிழில் உள்ள. | |
|---|---|---|---|
| தோள்கள் | 12 | எழுத்துக்கள் | 12 |
| கண்கள் | 18 | மெய் எழுத்துக்கள் | 18 |
| முகங்கள் | 6 | இன எழுத்துக்கள் | 6 |
| வேல் | 1 | ஆயுத எழுத்து | 1 |

இத்தனை ஒற்றுமைகளால் முருகனே தமிழ், தமிழே முருகன் என உறுதியாக உணர்க.

—வாரியார்.

தொகுத்து அனுப்பியவர் திருமதி. கமலா மாரியப்பன்-கோவை.





ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) $6\frac{1}{4}\times6\frac{1}{4}$ செ மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்த்து வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தை உண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சோந்து வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ.(கோல்டுபிரேம்)மேற்கண்டபலனைத் தரவல்லது | 500-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர். அமபாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுககு அதிர்ஷ்டத்தை உணடாககவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்த திருமணம தடையினறி நடககும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம லட்சுமி பீஜம டாலர் அமபாள் கடாட்சத்தை நிலைத்திருககச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண திருஷ்டி தொல்லைகளை நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வலலது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யநதரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீககிக் காப்பாற்ற வலலது | 150-00 |
| 18. | தத்தாத்ரேயர், விக்ன கணபதி, ம்ருத்யஞ்யம (சர்வ ஜெய யநத்ரம்) 8×24 செ.மீ. இந்த மூன்று யந்திரங்கள் சேர்த்து ஆகாயத்தில் செல்லும் விமானம் முதல் லாரி கார வரை கண திருஷ்டியால் ஏறபடும் விபத்தைத் தவிர்க்கவல்லது. | 500-00 |
| 19. | இன்னும் பலவிதமான டாலர்கள், மாலைகள் அனைத்தும் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டன. | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும. மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254


" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "

# கயை அருளிய கதாதர மூர்த்தி

திரு கே. நாகராஜன் — திருக்குணம்.

கயாசுரன் என்பவன் இறைவனைக் குறித்துக் கடுமையான தவம் இயற்றினான். அவனுடைய தேகத்திலிருந்து கிளம்பிய யோகாக்கினி தேவர்களை வருத்தியது. அவர்கள் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமனிடம் சென்று தங்களைக் காப்பாற்றுமாறு வேண்டினர். விஷ்ணுவும் அவர்களுக்கு மனமிரங்கி அவர்களைக் காப்பதாக உறுதி கூறி அங்கிருந்து புறப்பட்டு அசுரன் இருக்கும் இடத்தை அடைந்தார். கண் மூடித் தியானத்திலிருக்கும் அசுரனைப் பார்த்து, "அன்பனே! நீ வேண்டுவதை அடையக்கூடிய காலம் வந்து விட்டது. உன் விருப்பத்தைக் கேள், அப்படியே தருகிறேன்" என்றார். அசுரனும் விஷ்ணுவை நமஸ்கரித்து, "பிரபோ, எல்லா புண்ணிய க்ஷேத்திரங்களையும் விடப் புனிதமானதாக என் உடல் இருக்க அருள் செய்ய வேண்டும்" என்று வேண்டினான். விஷ்ணுவும் அவ்வாறே அனுக்கிரகித்துவிட்டு தமது இருப்பிடம் திரும்பினார்.

பின்னர் அசுரன் மூவுலகமும் சென்று அங்குள்ளோர் அனைவரையும் தனக்குப் பணியுமாறு செய்தான். தேவர்கள் அவனைக் காணவே நடுங்கினர். பிரமன் தேவர்களை அழைத்துக்கொண்டு அசுர பயத்தை போக்குமாறு திருமாலிடம் வேண்டினர். விஷ்ணு பிரமனையே அசுரனிடம் சென்று புனித காரியத்திற்காக அவனுடைய உடலைத் தருமாறு யாசகம் கேட்கச் சொன்னார். பிரமனும் அசுரனிடம் வந்து அவனைச் சந்தித்தார். அசுரன் பிரமனை வரவேற்று உபசரித்து தன்னால் ஆகக்கூடிய காரியம் ஏதும் இருப்பின் தெரிவிக்குமாறு வேண்டினான். 'கயனே, உன்னுடைய வீட்டிலே உன்னுடைய விருந்தாளியாகத் தங்கியிருக்கும் நான் செய்யப்போகும் ஒரு யாகக் காரியத்திற்குப் பாவம் எதுவும் தீண்ட முடியாத உன்னுடைய புனித உடலை எனக்குத் தர வேண்டும்' என்று பிரமன் கேட்டார்.

கயாசுரன் அவ்வார்த்தைகளைக் கேட்டு மிகவும் மகிழ்ந்து அவருடைய விருப்பத்திற்கு இணங்கியவனாய் அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கினான். பிரமதேவன் அந்த கயாசுரனுடைய மண்டை ஓட்டை எடுத்து அதையே ஹோமகுண்டமாகக் கொண்டு ஆராதனையை முடித்தார். வழிபாட்டை முடித்துக் கொண்டு அவர் புறப்படத் தயாராக இருக்கையில் ஸ்ரீ விஷ்ணு அங்கே தோன்றினார். அவர் பிரமனை நோக்கி, "நான்முகா, ஹோமத்தில் பூர்ணாகுதியைச் செய்ய வேண்டாமா?" என்று கேட்டார். பிரமனும் அவ்வாறே பூர்ணாகுதி செய்யும்போது அந்த கயாசுரனுடைய உடல் மெல்ல அசைந்து நகரத் தொடங்கியது. அப்போது மகாவிஷ்ணு தருமரைப் பார்த்து ஒரு பாறையைச் சுட்டிக் காட்டி 'நீங்கள் எல்லோருமாகக்கூடி இந்தப் பாறையைப் பிடித்துக் கொள்ளுங்கள். இதில் தெய்வீக சக்தி நிறைந்திருக்கிறது. என்னுடைய கதாயுதத்தின் சக்தியும், அவ்விதமே மற்றவர்களுடைய ஆயுதங்களின் சக்தியும் இந்தப் பாறையில் இறங்கட்டும்' என்றார். அவ்வாறே தருமராஜனும் விஷ்ணுவால் சுட்டிக்காட்டிய அந்தப் பாறையைக் கையிலே ஏந்திக் கொண்டான்.

தருமராஜனுக்கு தருமவதி என்ற அவருடைய மனைவியிடம் தருமவிரதை என்ற பெண் பிறந்தாள். பிரம்மாவினுடைய புத்திரரான மரீசி முனிவருக்கு அந்தப் பெண்ணை மணம் செய்து கொடுத்தார்கள். தம்பதிகள் இருவரும் மிகவும் அன்போடு அந்நியோன்யமாக இருக்கும் நாளில், ஒரு நாள் மரீசி முனிவர் தர்ப்பையும் மலர்களும் கொண்டுவர வனம் சென்று வந்தார். திரும்பி வந்தபோது அவர் மிகவும் களைப்புடன் காணப்பட்டார். மனைவியை அழைத்து, "பெண்ணே, என் கால்களைப் பிடித்துவிடு" என்றார். தருமவிரதை கணவருடைய பாதங்கள் அருகே அமர்ந்து அவருடைய சிரமம் நீங்கும் வகையில் கால்களைப் பிடித்துவிட்டாள். அதன் சுகத்திலே முனிவரும் களைப்பு நீங்கியவராய் அயர்ந்து தூங்கலானார். அவ்வமயம் பிரமன் அங்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும் தருமவிரதைக்கு மிகவும் சங்கடமாய்ப் போய்விட்டது. பூஜிக்கத்தக்க நான்முகன் வந்திருக்கும் பொழுது கணவருக்குச் செய்து கொண்டிருக்கும் சிசுருஷையை நிறுத்திவிட்டு எழுந்து அவரை பூஜிப்பது முறையா? என்பதை நிச்சயிக்க முடியாமல் திணறினாள். கணவருடைய பணிகளை முடித்த பின்னரே அவள் மற்றவர்க்கு உபசாரம் செய்ய வேண்டும். அவ்விதம் செய்வதுதான் பத்தினிகளுக்கு உகந்த "பதிவிரதா தர்மம்" ஆகும். ஆயினும் அனைவருக்கும் முதல்வராகவும் கணவருடைய தகப்பனாராவும் விளங்கும் பிரமனுக்கு உபசாரம் செய்யாமல் அவளால் இருக்க முடியவில்லை. ஆகவே அவள் எழுந்திருந்து மலர்ந்த முகத்தோடு பிரமனை வரவேற்று அவரைப் பலவாறு உபசரித்தாள்.

கண் விழித்த மரீசி முனிவர் அங்கு நடந்தவற்றை யோக சக்தியால் அறிந்தார். தம்மால் ஏவப்பட்ட காரியத்தில் முழு மனதோடு ஈடுபட்டிருந்த தருமவிரதை அதைப் பாதியிலே நிறுத்திவிட்டு எழுந்தது தவறு என அவருக்குப்பட்டது. ஆகவே மரீசி முனிவர் மிகுந்த கோபம்

கொண்டு அந்த தருமவிரதையை பாறையாகப்போகும்படிச சபித்தார். கணவருடைய கோபததைக கண்டு நடு நடுங்கிய தர்மவிரதை கண்ணீா உகுத்தவளாய் அவருடைய பாதங் களிலே விழுநது தன்னை மன்னிக்கு மாறு வேண்டினுள். "பிரபோ, நான் குற்றமற்றவள். தங்களுடைய தகப் பஞரைக் கௌரவிகக வேணடும என்ற எண்ணத்தாலேயே நான பாதி யில் எழுந்தேன். ஒரு குறறமும செய்யாத எனனை சபித்தது முறை யாகுமா" என்று தன உள்ளதது வேதனையைக் கூறி முறையிட்டாள. முனிவரோ சற்றும அவளுடைய முறையீட்டை ஏறபதாயிலலை. ஆகவே அவள் அவ்விடத்தை விட்டு வெளியேறி அக்னி தேவனைப் பிராாத் தித்து தனக்கு ஓர் இடம பெறறு அங்கு ஆயிரம் வருடம தவம செய தாள. முடிவில் அவள்முன ஸ்ரீ மகா விஷ்ணு தோன்றத் தன்னைப் பற்றி யிருக்கும் சாபம் நீங்குமாறு அருள் புரிய வேணடும் என்று தருமவிரதை கோரினுள்.

"பெண்ணே, மரீசி முனிவர் கொடுத்த சாபததை விலககுவது என்பது முடியாது. அது நடநதே தீரும். அவருடைய சாபப்படி நீயும் பாறையாவது உறுதி. ஆயி னும் பாறையாகக கிடககும் உன னிடம் எங்களுக்கு அனுதாபம எப் போதும் இருக்கும். பாறையாக இருக்கும் உன்னைக் கொண்டு கயா சுரனை இருக்கும் இடத்திலேயே கட்டுபபடுத்தி வைத்திருககப போகி றேன்" என்றுர் மகாவிஷ்ணு. தரும விரதை அதனைக் கேட்டதும பெரிதும மகிழ்வுற்று அவரை மீண்டும் பணிநது சொனனாள. "ஹே பரந்தாமா! தங்களுடைய அனுதாபம என விஷயத்தில் எப்போதும இருநது வரும் என்பது உணமையானுல் தாங் களும், ருத்திரன், பிரமன் முதலாளே ரும் தங்கள தேவிமாருடன் பாறை யாகக் கிடககப்போகும் என மீது அமர்ந்து எல்லோருக்கும் அருள் பாலிக்கும பாக்கியம் அருள வேண் டும்" என்றுள்.

அவள் கேட்ட வரத்தை அளித்தார் மகாவிஷ்ணு. பின்னர் கணவருடைய சாபப்படி தருமவிரதை பாறையா ளுள். பரந்தாமன் அந்தப் பாறை யிலே அனைத்து தேவாகளுடைய சான னிதத்தியமும இருககுமாறு செய்தார் தருமராஜனைக கொண்டு அந்தப் பாறையைப் பிடித்துக் கொளளச் செயது நகர்நது செல்லும் அசுரனு டைய உடலினமீது அநதப் பாறை யைக் கிடத்தச் செயதாா. தரும விரதையின கோரிக்கைப்படி மும் மூர்த்திகளும தஙகளுக்கு அநதப் பாறையிலே ஓர் இருப்பிடம் ஏற் படுததிக் கொணடனர். இந்த நிலை யிலும் அசுரன் உடல் பாறையோடு நகரத தொடங்கியது. அதைக கணட தேவாகள மிகவும்பயநது விஷ்ணுவை சரண அடைந்தனர். விஷ்ணுவும அப்போது அப்போது அங்கு "கதா தர மூாததியாக" எழுந்தருளி அனை வருக்கும காட்சி தந்து அசுரனுடைய அசைவையும் தடுத்து நிறுத்திஞா.

முன்னா ஒரு சமயம் கதன் என்ற அசுரன் ஒருவன இருந்தான். அவன தேவாகளைப் பலவிதத்திலும் கொடு மைப்படுத்தினுன். அதனுல் சினம் கொணட மாதவன் அசுரனுடன் யுத தம் செய்து அவனைக கொன்றுர். தேவதசசனுகிய விசுவகர்மா அநத கத னுடைய எலுமபைக கொண்டு தண டம போனற ஓா ஆயுததைதச செய்து கோவிநதனிடம கொடுத் தாா. அவரும அதை மிகவும் மகிழ்ச சியுடன ஏறறுக கொணடார். பின் னா தேவாகளுககாக அசுராகளுடன போர் செயய நோநத பல சமயங் களில அவா அநத ஆயுதத்தால எண ணறற அசுராகளை வதம செய்தார். கதன என்ற அசுரனுடைய எலும பினுல செய்யப்பட்ட அநத ஆயுதம கதை எனப பெயரை அடைநதது. கயாசுரனை அடக்க விஷணு அநத கதையை ஆயுதமாக ஏநதிக் காட்சி தநது சூரனையும அடககியதால கதா தரமூர்த்தி என வழங்கப்பட்டார்.

உடல் அசைவற்றுப் போனதைக் கண்ட கயாசுரன விஷ்ணுவைப் பாாத்து, "பிரபோ, என்னை ஏன வஞ்சித்துவிட்டீாகள்? என்னுல் சிறிது கூட அசைய முடியவில்லையே ஏன்" எனறு கேட்க, விஷ்ணுவானவா அவனைப் பாாத்து, "அசுரனே, வருந தாதே ஓர் ஒப்பறற புனித காரி யததுககாகவே உனனை இஙகு ஸதிரப படுத்தினேம. நாஙகள் மும்மூர்த்தி களும எபபோதும் உன சமீபத்தி லேயே இருப்போம். இவவுலகிலே புண்ணிய ஸ்தல யாததிரை மேற் கொளளுவதற்காக விதிககப்பட டுள்ள இடஙகள் எல்லாவறறையும காட்டிலும உன்னுடைய தேகம தஙகி யுள்ள இநத இடமான கயை மிகவும புனிதமானதாக இருக்க நாங்கள அருள செய்கிறேம. கயாசுரனுகிய நீ தங்கிய இந்த இடமே இனறு முதல கயை என்ற புண்ணியத்தலமாக விளங்கட்டும. உன்னிடத்திலே வநது பிதுருக்களுக்கு செய்கின்ற காமாவே பித்ருக்களுக்கு மிகவும் திருபதியை கொடுப்பதோடு அவர்களுக்கு முக் தியை அளித்து என்னுடைய பரம பததத்தில் என்றும நீஙகாமல் இருக கின்ற சித்தியையும் அளிக்கும. பித ருககள் உனனிடத்திறகு வந்து தஙக ளுக்கு அளிககபபடும் விசேஷங்களை ஆனந்தத்தோடு ஏற்பர்" எனறு கூறி, மேலும் கூறினுர். கயா க்ஷேத திரத்தில் நான் பித்ருக்களின ரூபத்தில் இருபபேன. யாா ஒருவன கயைக்குச் செல்லப போகிறேன் என்று சொல்லி யாததிரையைத் தொடங்கும முன்னதாகவே அவனு டைய இறநதுபோன மூதாதையர்கள் எனனுடைய சொர்ககததை நோக்கி ஏறத்தொடஙகிவிடுவர்" என அனேக விதமானவரங்களைக கொடுத்துத் தன் னுடன வந்த தேவர்களை நோக்கி "நீஙகள சூரிய சநதிரன உளள வரை இநத க்ஷேததிரததிறகு வரும் யாத்ரீகாகளுகக இதன பெருமைகளை எடுத்துக கூறி சிராாத்தாதி காரியங களைச் செவ்வனே குறைவின்றி நடத்தி வைத்துக் கொணடு அதனையே உஙகள ஜீவனமாகவும் நடத்தக கடவீாகள்" என அவர்களுககு அருள்பாலிததார். அது முதல் அநத பிரதேசம கயாசுரன பெயரைக கொணடே கயை எனவழஙகலாயிற்று. விஷ்ணுவும் கயையை உண்டாக்கி அருளியதால அங்கு கயை அருளிய கதாதரமூர்த்தியாக அருள் சாதிக் கிறுா. ★

# கருத்து ஒன்று கதை மூன்று

திரு. எம். எஸ். பிச்சுமணி,
சென்னை—56.

முன்னொரு காலத்தில் ஜோதிபுரியில் அரசு புரிந்து வந்த சுகுணவானும், அவனது குருவான ஸோமதேவசர்மாவும் கால பலத்தால், தக்ஷிண பத்ரி என்று அழைக்கக்கூடிய திருக்குறுங்குடியில் நம்பிச் சாம்பரனாகவும், பிரம்மராட்சதனாகவும் பிறக்கின்றனர்.

நம்பிச்சாம்பரன் எப்போதும் திருமாலின் எண்ணத்தோடு, பக்திப பாடல்களைப பாடிக் கொண்டு அங்குள்ள திருக்கோவிலுக்குப் போய் வருகிறான்.

ஒரு சுக்லபட்ச கார்த்திகை மாத ஏகாதசியன்று, நம்பிச்சாம்பரன் திருமாலின் திருக்கோவிலுக்கு வந்து கொண்டிருக்கிறான். அச்சமயம் பிரம்மராட்சதன் வழி மறைத்து, 'என் பசிக்கு உன்னைச் சாப்பிடப் போகிறேன்' என்று பயமுறுத்துகிறது.

'நான் ஏகாதசி விரதம் இருந்து, திருமாலைப்பற்றி பாடிப் பக்தியோடு திருக்கோவிலுக்குச் சென்று கொண்டிருக்கிறேன். என்னைப புசிப்பதால் உனக்குப் பசியும் நீங்காது. இருந்தாலும், உன் பசியைத் தீர்க்க நான் ஓர் எண்ணம்கொண்டுள்ளேன். அதன்படி நான் விரைவில் திருக்கோவில் சென்றுவிட்டு மீண்டும் உன்னிடமே வந்து சேருகிறேன். ஆகவே இப்போது என்னை வழிமறைக்காதே. பரந்தாமனைப் பாடி விரைவில் வந்து சேர்ந்தவுடன் என்னை நீ உனது ஆகாரமாக்கிகொள்' என்றான் நம்பிச்சாம்பரன்.

பிரம்மராட்சதன் பிடியிலிருந்து விடுபட்ட நம்பிச்சாம்பரன், பிறப்பினால் தாழ்த்தப்பட்ட வகுப்பில் வந்தபடியால் திருக்கோவிலுக்குள் செல்லாமல், வெளியிலிருந்தே திருமாலை தனது பக்திப் பாடல்களால் கைசிக ராகத்தில் பாடிக் கொண்டு, 'திருமாலே நான் உன்னைப் பரிபூரணமாகக் காண முடியவில்லை. இன்று எனக்கு ஆயுளும் முடியப்போகிறது. பிரம்மராட்சதனும் என்னை உணவாகக்கிச் சாப்பிட்டுவிடப்போகிறான்' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு தவித்துக் கொண்டிருக்கிறான்.

பகவான பக்தனின் பக்தியை மெச்சி, தனக்கு முன்னால் இருந்த கருடாழ்வாரையும், துவஜஸ்தம்பத்தையும் சற்று வடக்காக நகரச் செய்து, தன் பரிபூரண நிலையை நம்பிச்சாம்பரனுக்குக் காட்டி மகிழ்விக்கிறான். அன்று முதல் அவன் நம்பாடுவனாக, வைணவ உலகத்தில் பிரகாசித்து வருகிறான்.

இன்னும் அந்த நிகழ்ச்சியை நம் கண் முன் கொண்டு வந்து நிறுத்தச் செய்ய திருக்குறுங்குடி திருத்தலம் அனைவரையும் வரவேற்கிறது.

அத்திருத்தலத்தில் சுந்தர பரிபூரணனான திருமால் தனது பக்தனுக்காக, தன் முன்னால் நின்ற கருடாழ்வாரையும், தவஜஸ்தம்பத்தையும் சற்று வடக்காக நகரச் செய்த காட்சியையும் கண்டு மகிழலாம்.

சோழ மண்டலத்தில் சிதம்பரத்தைச் சேர்ந்த வைதீகர் ஒருவரிடம் நந்தன் என்ற ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த சிவ பக்தன் ஊழியம் செய்து கொண்டிருந்தான். அவனுக்கு வெகு நாட்களாக சிவனைக் கண்டு தரிசிக்க வேண்டும் என்ற உன்னத ஆவல் மனத்தில் இருந்து கொண்டேயிருந்தது.

ஒரு சமயம் இந்த எண்ணத்தை தனது பண்ணையாரிடம் தெரிவித்தான் நந்தன்.

பண்ணையார் மிகவும் கோபத்தோடு 'இப்போது விவசாய நேரம். உனக்கேன் சிவ பக்தி வேண்டிக்கிடக்கு. நீ எங்கும் போக வேண்டாம்' என்று கோபித்துக் கொண்டார்.

மிகுந்த வேதனையோடு நந்தன் வீடு திரும்பினான். ஒன்றும் புரியாமல் சிவபெருமானின் நினைவாகவே படுத்து உறங்கிவிட்டான்.

மறு நாள் காலை தனது விவசாய வேலைகளைக் கவனிக்கும் பொருட்டு வேதியரின் கழனிக்குச் சென்றான். வேதியரின் வயலில் அறுவடையாகும் நிலையில் பயிர்கள் காணப்பட்டன. இதைச் சொல்ல வேதியரிடம் புறப்பட்டு வந்தான் நந்தன். ஆவலுடன் கேட்டுத் தெரிந்து கொண்ட வேதியரும் நந்தனை சிவ தரிசனம் செய்ய அனுப்பிவைத்தார்.

மகிழ்ச்சியுடன் நந்தன் திருப்பங்கூர் திருக்கோவில் முன் வந்து நின்றான். சிவபெருமானைக் காண உள்ளம் உருகி வேண்டி நின்றான்.

ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தபடியால் நந்தன் திருக்கோவிலுக்குள் செல்ல முடியாமல் இருந்தது. பக்தனின் நிலை அறிந்த சிவபெருமான், தன் முன் வழி மறைத்து நின்ற நந்தியைச் சற்று விலகியிருக்கச் செய்து நந்தனுக்குத் தனது பரிபூரண நிலையை காட்டி மகிழச் செய்தான்.

இந்த உன்னத நிலையை - அன்று நந்தனுக்கு விலகிய நந்தியோடு காட்சியளிக்கும் சிவபெருமானை - திருப்பங்கூர் திருத்தலத்தில் இன்றும் பார்க்கலாம்.

### தி. தி. தேவஸ்தானத்தாரின

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரலகள

காலே

5-00 முதல 5-30 வரை—சுப்ரபாதம
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நானகு நபாகள் மட்டுமே அனுமதிககபபடுவா)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலே —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸாவதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாநதசேவை

காலே

## வெள்ளிக்கிழமைகளில

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள பங்கேறகலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம (ரூ. 2/- நபர் ஒருவருககு)

## ஆரஜிதக கட்டண விவரங்கள

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக கட்டணம் ரூ. 5/- (நபா ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியஙகள் | | | ஆர்ஜித சேவைகள | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருசசி உற்சவம | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் (வெளளிக்கிழமைகளில் மட்டும்) | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத | ,, | ரூ. 180/- | | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருபபாவாடை (கிருஹஸதர்க்கு 5 கிராம் எடையுளள வெள்ளிடாலா கொடுக்கப் படும) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்சசனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பகதர்கள அதறகான ரூ. 1-50ககான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாஙகிக் கொள்ள லாம். இதுபோது பக்தரின் பெய ரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

திருநள்ளாறு என்ற தலமானது சப்தவிடத் தலஙகளில ஒன்று அஙகு தாபபாரணயேசுவரா நிதயவாசம செய்து வருகிருர். அவருக்கு ஒரு இடையன தினமும பால கொடுத்துக கொணடிருத்தான். இடையன கொடுதது வந்த பாலைத தன வீட் டிறகுத் தினமும, கோவில கணககுப் பிள்ளை எடுத்துக கொணடு போய விடுவான். கணக்கையும திருக் கோவில் கணக்கிலேயே எழுதி வநதான.

பிறகு கோவிலுக்குக கொடுததுக கொணடிருநத பாலை தனது விட்டி லேயே கொடுத்துவிடுமபடி பய முறுத்திக் கொண்டிருநதான.

இடையன் மிகவும் மனம நொநது ஈசனிடம முறையிட்டான்.

ஈசன கணக்குபபிளளையின தலை யைக் கொய்ய தனது சூலத்தை எறிநதபோது, தன் எதிரிலிருநத பலி பீடம மணடபத்தின் பக்கமாக சற்று விலகிச சூலம் செல்ல வழி விட்டது.

தனது பக்தனுக்காக, பொய்கணககு எழுதி வந்த கணக்குப்பிள்ளையைத தண்டிக்க பலிபீடம விலகுகிறது.

எனவே பகதர்களுககாக, பரநதா மனும் சிவபெருமானும், தன் முன் இருநத கருடாழ்வார, தவஜஸதமபம், நந்தி, பலிபீடம போனறவறறை மாறறியமைதது, ஓர உனனத நிலையை எடுத்துக் காட்டி மகிழச் செய்தாாகள.

இநத உனனத நிலையைத திருககுருங குடியிலும, திருப்பஙகூரிலும், திரு நள்ளாறறிலும் இனறும காணலாம.

இந்த முன்று நிகழச்சிகளும உண மையான பக்தனுக்கும் இறைவனுக் கும் உள்ள நெருங்கிய தொடாபினை விளக்கிக் கூறவே நடைபெற்றன.



# குருமகிமை

"வையததுள வாழவாஙகு
வாழ்பவன-வானுரையும
தெய்வததுள வைக்கபபடும்"

—என்பது குறள்வாக்கு.

பிறவி எடுததப் பயன அனைவராலும் போற்றுதற்குரிய நெறிமுறைகளின படி நல்வாழ்வு வாழ்ந்து, வானோரும போறறும பேறுபெறற மகான்கள பலர். "கருவிலே திருவுடையராத லின" அவர்கள் பிறவிப்பயன் பெருமை உடைத்ததாகிறது. தகை சார்ந்த பெரியோாகளில் சமீபகாலத்தில் இவ்இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்து ஜீவன் முகதர்களானவர் பகவான் ஸ்ரீ ரமணர், ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ராம லிங்க அடிகளாா ஆகியோர்.

அஞ்ஞான இருளை அகற்றுபவா குரு. அஞ்ஞானத்தால் தததளித்துக்கொணடிருக்கும நமது மனதைத் தெளிவு படுததுபவர் யாரோ அவரே குரு.

"த்யான மூலம் குரோர்மூர்த்தி
பூஜா மூலம் குரோர்பதம்
மந்த்ரமூலம் குரோர் வாக்கியம
மோக்ஷமூலம குரோா கருபா"

தியானததுக்கு ஆரமப இடம் குருவின வடிவம். பூஜைககு ஆதாரமாக இருப்பது குருவின் திருவடிகள். மந்திரத்தின் வடிவமாக இருபபது குருவின் வாக்கு. முக்திககு வேராக இருப்பது குருவின பரம கிருபை. எனவே குருவே சிறந்தவர் எனறு நம் ஆனறோர்கள் அறுதியிட்டுக் கூறியிருக்கிறார்கள். அவரனறி உயிர்களுக்கு உய்யும் வழி கிடையாது. குருரூபம் ஈசனின ரூபததை விட மேலானது எனறு சொல்வார்கள் "ஆசார்ய தேவோ பவ"

தென் திசை நோக்கி அமர்ந்தவராக மோனததவம் இயற்றியவாறு சினமுத்திரை காட்டி, தம் திருவடியினகீழ் வயப்பட்டு அமர்ந்திருக்கும் சனகாதி முனிவர்கள் அவரைக் கண்ணால் கண்ட மாத்திரத்திலேயே ஞான விளக்கம் பெற்றுவிடுகின்றனர்.

அந்த தட்சிணாமூர்த்தியின அவதாரமாக விளங்கும் பகவான் ஸ்ரீ ரமணர் திருசசுழியில் பிறநது, மதுரையில் வளர்நது அருணாசலம என்ற பெயரைக கேட்ட மாத்திரததில் ஆன்மீக ஒளி பெற்று, தாம் நாடிய அருணாசலத்திறகே சென்று தவமியற்றி உலகோா உய்ய வழிகாட்டியவர்.

அதே திருவண்ணாமலையில் சிறந்த சத்புருஷராக அவரது காலத்திலேயே

**திரு. ஜி. ஆர். சுப்பிரமணியன்,**
*மதுரை.*

வசிததவர் ஸ்ரீ சேஷாததிரி சுவாமிகள். இபபடி பல தவசிரேஷ்டாகள் பிறநத நாடு நமது நாடு சிறந்த அத்வைத தததுவத்தை எடுத்துரைதது அத்வைத குருவாக போற்றப்பட்டவர் ஆதி சங்கரா. இந்த மகானகளோடு போற்றுதற்குரியவராக, "இமய ஜோதியாக" இருந்து இன்றும மககளின் இதயங்களில் "இதய ஜோதி"யாக வாழ்நது கொணடிருப்பவர் சுவாமி சிவானநதா கண்ணனா கீதையிலே சொனன படி வாழ்நதுகாட்டிய வள்ளல என்று அவர் போற்றப்படுகிறார்.

ராமகிருஷ்ணர், ரமணர் போன்ற உத்தம புருஷர்களைப போல சொல்லிய சொல்லியாஙகு வாழ்ந்த தவசிரேஷ்டரான இம்மகான் உயாகுலச் செம்மலான அப்பய்ய தீட்சிதர் பரம்பரையில் வந்த வெங்கு ஐயருக்கும், பார்வதி அம்மாளுக்கும் 1887-ம் ஆண்டு செப்டம்பர் 8-ம் தேதி தரணி போற்றும் பரணி நட்சத்திரத்தில் நெல்லை மாவட்டம பத்தமடையில் திரு அவதாரம செய்தார்.

**அன்பே உருவானவர்**

இளமைப் பிராயததிலிருந்தே அனபுருவாகத் திகழ்நதவர். "காக்கை குருவி எங்கள் ஜாதி" எனறு பாரதியார் பாடியது போல "அனைவரும் சமம்" எனற சமதிருஷ்டியோடு வாழ்ந்தவர். தமககு அன்னை அளித்த தினபண்டங்களைக் காக்கை, குருவி, அணில் முதலானவற்றுக்குப் போட்டு அவை உணடு மகிழ்வதைக் கண்டு தானும் மகிழ்ந்தார். "எல்லா மனிதரிடத்தும், எல்லா உயிாகளிடத்தும் நானே உறைகின்றேன்" என்று கண்ணன் கூறியபடி அனைவரையும் ஒன்று போலவே நேசித்தார்.

"விளையும் பயிர் முளையிலே" என்பார்கள். அது போல சுவாமி விவேகானந்தர் போனறு சிறுபிராயம் முதலே படிப்பிலும் சரி, விளையாட்டிலும சரி, தலைமைத் தாஙகும் தகுதியிலும் சரி தனித் தன்மை பெற்றுத் திகழ்ந்தார். பின்னா ஆசிரமத்தை அமைதது அதன் தலைமைப் பதவியை ஏற்ற போது இநதத தலைமை தாங்கும தனித்தனமை சிறப்பாக விளங்கியதைக் காணலாம். தவத்திருக் கோலத்தில் தம்மை நாடி வந்த அனைவருககும அருள்மாரி பொழிந்த பெருநதகையாளா அவர்.

**தொண்டுள்ளம்**

எளியோருக்குத் தொண்டு செய்வதுதான் உண்மையான கடவுள் தொண்டாகும என்பார் காந்திஜி. 'ஏழைகளிடம் தெய்வத்தைப் பார்.

படிக்காத பாமரமக்களும் உன் தெய்வமாக விளங்கட்டும்' என்று விவேகானந்தர் கூறுவார்.

"தொண்டன், தொண்டன, தொண்டன் சடகோபன" என்று திருவாய் மலாந்தருளினா நம்மாழவார். அதே பாஙகில் தொணடே மூசசாக வாழ்ந்தவா நமது குருதேவர் அவர் ஒரு டாக்டராக இருநததால உடல் பிணிககு மருந்து கொடுத்ததுடன், உளளப்பிணி தீாககவும உதவி அருளினுர்.

பொதுநலத் தொண்டருடன ஆன்மீகத் தொணடையும் செய்து வநதார். ராமாயணம், மகாபாரதம, உபநிஷதங்கள் முதலான இநது மத நூல்களில் கணடுள்ள அரிய வேதாநத கருத்துக்களை அனைவரும் எளிதில் புரிந்துகொணடு பயனடையுமாறு எளிய ஆங்கிலத்தில் பல நூலகளை எழுதியுள்ளாா.

"பகைவனுக்கு அருள்வாய் நன னெஞசே" என்ற பாரதியின வாக்கிற்கிணங்க, "இன்னு செய்தாரை ஒறுக்க இனியவே செய்த" பெருமகனா அவர். "ஒரு கனனத்தில் அடிததால் மறு கனனத்தையும் காட்டு" என்று ஏசுபிரான் கூறியபடி, தன்னைத தாககவநதவனையும மன்னித்து அருளினா.

ஒரு சமயம் ரிஷிகேஷ் ஆஸரமததில் சுவாமிகளை கோவிந்தன எனபான ஒருவன் கோடாரி கொண்டு தாகக வநதான் அன்றைககு வழககத்திற்கு விரோதமாக சுவாமிகள தலைப்பாகை அணிநதிருந்தாா. கோடரி கொணடு கோவிந்தன் தாக்கிய போது, கோடரி தனியாகவும், காம்பு தனியாகவும தெறித்து விழுந்தது. அதற்குள சீடாகள் பதை பதைகக ஓடிவநது கோவிநதனைத் தணடிகக முற்பட்டனர்.

உடனே குருதேவர் அவாகளைப் பார்த்து "எனக்கு ஒன்றும் நேரவில்லையே. ஆணடவன் அருளால் நான சௌககியமாக இருககிறேன. அவனை ஒன்றும் செய்யாமல் போக விடுங்கள" என்று அனபுடன கூறிக் கோவிநதனை மன்னித்து விட்டார். அவன் பின்னர் தனது தவறுககு வருநதி சிவானந்தரின் சீடர்களில் ஒருவனுக ஆனுன.

"பிறர் உனககு இழைத்த தீமைகளை மறந்து மன்னிதது விடு. உனனை வெறுபபவாகளையும நேசி" என்று போதித்தவா குருதேவர். தாம சொன்னபடி தமமைக கொல்ல வந்தவனையும மனனிததருளினர்.

குழநதைகளைக கூட அன்புடன "வாருஙகள்" என்றுதான கூபபிடுவாா. தோட்டியைக கணடாலும், "ஆயியே மகராஜ்" என்று அழைபபார். இநத அளவுககு யாரிடமும பேதமினறி பழகுவாா.

"அனபர் பணி செயய எனை
ஆளாககிவிட்டால்
இனப நிலை தானே வநதெய்துமு
பராபரமே.

எனும் தாயுமானவா கூறறுககு ஒரு அனுபவ மூனனுதாரணமாக அவர் விளங்கினுர்.

## ஒருமை உணர்வு

சுவாமி சிவானந்தா எல்லோரையும சமதிருஷ்டியோடு பாாததார் மூடனையும, மூாக்கனையும், சாதுவையும் ஒனருகவே நேசித்தார்.

"ஒத்தாரும, உயர்ந்தாரும,
தாழநதாரும
ஒருமை உளராகி உலகியல்
நடதத வேணடும

என்று வேணடியவர் அடிகளாா அநதக கருணை உள்ளம் படைத்தவா சிவானநதர் அவருடைய பரம கருணையை அனுபவிததவர்கள் பலா அவரது ரிஷிகேஷ ஆஸரமததிலு கிறிததுவா, முகமமதியர், பாாஸி, சீனா, ஹிநது இப்படி பலதரபபட்டவாகளும வநது அவரை வணஙகி ஆசிபெறறுச சென்றுளளனா.

'தீராத வியாதி தீர்ந்தது' 'எனககு உங்கள அருளால் நனமை விளைந்தது.' 'பெணணுக்குத் திருமணம நடந்தது' என்று சுவாமிகளிடம் இப்படிப் பலர் கூறியிருககிறாாகள். "அப்படியா! நான ஒன்றும செய்யவில்லையே. எல்

---

# பிரதட்சிணம்

பொதுவாக பிரதடசிணம செயபவர்கள் முககியமாகக கடைபபிடிகக வேணடியன :

பிரதட்சிணம செயய ஆரமபிததநதும் எடுதது வைதத காலுககுளளேயே அடுதத காலை வைக்க வேண்டும். பிரசவிக்கும் தருவாயில இருககும பெணமணி தலையில் எணணைக குடததுடன தளும்பாமல நடநதால் எபபடி நடப்பாளோ அதேபோல செய்ய வேணடும. காரணம் எனன தெரியுமா? இதுதான.

மனம, பிரதட்சிணம் செய்யுமபோது தெய்வத்துடன ஒனற வேணடும். அமைதியாக அடிமேல் அடி எடுதது வைதது தோத்திரங்களைச சொலலிக் கொண்டு நடப்பதால் உடல், மனம் இரணடும் இலேசான உணர்வு பெறும. இப்படி இலலாத வெறும ஓட்ட நடையினுல் பயன ஏதும இல்லை.

'உபாசனை வழி காட்டி' எனற நூலில இருநது தொகுத்தவர்—

திருமதி. கமலா மாரியபபன், கோயமுத்தூர்.

லாம ஆண்டவன் அருள்" என்று புன்முறுவல் பூத்தவாறே சொல்லி அவர்கள் கூறும சக்தி எதுவும் தமக்கு இல்லை என மறுத்துவிடுவார்.

**குருவருள்**

ஒரு முறை ராமகிருஷ்ணரிடம் ஒரு ஏழை வந்து, "ஆண்டவனே நான் சாகின்ற காலத்தில் என்னருகில் நீங்கள் இருக்க வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டான். அது போலவே பகவானும் வாக்குக் கொடுத்தார். அவன் மரணத் தருவாயில் ஸ்ரீராமகிருஷ்ணரின் தரிசனம் அவனுக்கு கிடைத்தது "ஐயனே! வந்து விட்டீர்களா!" என்று மகிழ்ச்சியுடன் அவன் கேட்ட அடுத்த விநாடி அவன் உயிர் பிரிந்தது.

ஆதிசங்கரரிடம் சநந்தனா என்ற சீடர் ஒருவர் இருந்தார். மற்ற சீடர்கள் இவருக்கு என்ன தெரியும் என்று அகந்தையுற்றிருந்தனர். சநந்தனரின் அருமை, பெருமைகளை அவர்களுக்கு உணர்த்த சங்கரர் திருவுளம் கொண்டார்.

ஒரு நாள் சங்கரர் கங்கையின் இக்கரையில் அமர்ந்து உபதேசம் செய்து கொண்டிருந்தார். மறு கரையில் அவரது வஸ்திரங்களை உலர்த்தி எடுத்துக் கொண்டிருந்த சநந்தனரிடம் திடீரென "சநந்தனா வா, நான் கட்டியிருந்த வஸ்திரம் ஈரமாகி விட்டது. விரைவில் காய்ந்த வஸ்திரத்தை எடுத்து வா" என்று சங்கரர் பணித்தார். சநந்தனர் எதையும் யோசியாமல், குரு தம்மை அழைக்கின்றார், உடனே அக்கரைக்குப் போக வேண்டும் என்ற ஒரே சிந்தனையுடன் விடுவிடுவென கங்கை ஆற்றில் இறங்கி நடக்க ஆரம்பித்து விட்டார். கங்கையில் அவர் பாதங்களை அடுத்தடுத்து தாங்கிக் கொள்ள தாமரை மலர்கள் முளைத்தன. தாமரை இதழ்களின்மீது அவர் நடந்து சென்றதால்தான் அவருக்கு பத்மபாதர் என்ற பெயர் வந்தது. குருவின் அருளால் அவர் கங்கையைக் கடந்து செல்ல முடிந்தது

சேஷாத்திரி சுவாமிகளின் பக்தர் ஒருவர். அவர் ஒரு வியாபாரி. அவர் திருநெல்வேலியிலிருந்து பஸ்ஸில் மதுரை வந்து கொண்டிருந்த போது, அவர் வந்த பஸ் விபத்துக்குள்ளாகி பஸ் டிரைவர் உட்பட சிலர் உயிர் இழக்க நேரிட்டது. விபத்துக்கு முன்பு திடீரென தன்னை யாரோ 'குதி, குதி' என்று சொல்வது போல உணர்ந்து கீழே குதித்துவிட்டார். அவர் வைத்திருந்த மணிப்பர்ஸ், கைக் கடிகாரம் முதலானவை காணாமல் போயவிட்டன. இனி மதுரைக்கு எப்படி போவது என்று திகைத்து நிற்கையில் அந்த வழியே ஐயப்ப பக்தர்கள் சிலர் ஒரு வேனில் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் அவருக்கு உதவி செய்து மதுரைக்குத் தங்களுடன் இலவசமாக ஏற்றி வந்தனர். குருவின் அருளால்தான் பத்திரமாக உயிர் பிழைத்து வந்து சேர்ந்ததை எண்ணி எண்ணி அவர் மனம் நெகிழ்ந்தார்.

அதே போல சுவாமி சிவானந்தரும பலருக்கு உதவி உள்ளார். ஒருசமயம் தென்னாப்பிரிக்காவில ஒரு பெண் அருந்த இருந்த பாலில விஷம் கலந்திருப்பதை உணர்த்தி அவரைக் காப்பாற்றினார் அலகாபாத்தில் ஒரு பெண்ணின் சேலையில் தீப்பற்றியதை உணர்த்தி அவரைக் காப்பாற்றினார் இப்படி மகான்களின் வாழ்வில் பல அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன

**அருளுரைகள்**

"'முகமே ராம, காமே காம்' என்று வாயில் ராம நாமத்தைச் சொல்லிக் கொண்டே உனது செயலை செய்து முடி" என்று உபதேசித்தார். அவர் அன்பர்களுக்கு அறிவுரைகள் கூறிய விதமே அலாதியானது. பல அரிய கருத்துக்களைச் சொல்லிக் கொண்டே வரும் போது, இடையிடையே ராம நாமத்தையும் இணைத்து அனைவரையும் சொல்லும் படிக் கூறுவார். எளிய முறையில் நல்ல பல கருத்துக்களைக் கூறி அனைவரும் உய்யுமாறு வழிகாட்டிய உத்தம சீலர் சுவாமி சிவானந்தர்.

**வைகுந்தம்**

குடும்பத்தை வைகுண்டமாகக வழிகூறியவர். "Go to Vaikunta" என்று அவர் சொல்லவில்லை. அப்படிச் சொல்லியிருந்தால் அதன் பொருளே வேறு. ஆனால் "Bring Vaikunta to your House" என்று கூறுவார் நம வீட்டையே வைகுண்டமாக்கலாம். எப்படி? கணவனும் மனைவியும ஒருவரை ஒருவர் உணர்ந்து, நேசித்து எப்போதும இறை உணர்வோடு 'யாவும் அவன் செயல் அவன சித்தப்படியே எல்லாம் நடக்கும்' என்ற நம்பிக்கையோடு அமைதியாக வாழ முற்பட்டால் அந்த வீடு நிச்சயமாக ஸ்வர்க்கமாக மாறி மாறிவிடும்.

LOVE, SERVE, GIVE, MEDITATE, REALISE

BE GOOD, DO GOOD, BE KIND, BE COMPASSIONATE

என்று அவர் நமக்கு போதிக்கும கருத்துக்கள் எவ்வளவு எளிமையாக மனதில பதியுமாறு அமைந்துள்ளது பாருங்கள்.

அவர் வாழ்ந்த காலத்தைப் போலவே, 'எல்லோரும இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன பராபரமே" என்று அனைவரும் ஆனந்தமாக வாழ வேண்டி இன்றும சூட்சும உருவில் இருந்து கொண்டு தம்மை நாடிவரும பக்தர்களுக்கு அருள பாலித்துக் கொண்டிருக்கிறார்.

குருர் பிரம்மா; குருர் விஷ்ணு;
குருர் தேவோ மகேஸ்வர ;
குருர் சாட்சாத் பரபிரம்ம:-ஓமதத்ஸத்
தஸ்மை ஸ்ரீ குரவே நம :

★

# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தரும சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடில்களின் மேல் பொதுமக்களின் நன்கொடைத் திட்டத்தின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர்/பக்தர்களுக்குத் தொண்டு புரிந்திடும் ஓர் அரிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல் தளம்.

ஆழ்வார் ஏரி, மங்கள்பாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய காட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல்கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள், 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும். இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன்கொடைத் தொகை ரூ. 1, 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள்.

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூன்று தளங்களைக்கொண்ட மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர்களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ்அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள்:

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 943 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 1×12'4' அளவில் இவ்வறைகள் விளங்கும் இவ அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி:

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரண்டு தளங்களில் கட்டப்பட்டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 1.20 மீ × 1.20 மீ பரப்பளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக் கட்டிடத்திற்காகவோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற்கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடங்களுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம்/அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும் வழங்கலாம்.

## சலுகைகள்

நன்கொடையாளர் அல்லது அவர் உறவினர்கள் அல்லது நிறுவனத்தின் அல்லது அறக்கட்டளையைச் சார்ந்த உறுப்பினர்களோ அல்லது அவற்றின் அலுவலர்களோ வருடத்தில் 60 நாட்களுக்கு, (ஒருமுறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளித்த தங்கு வசதிகளில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு,

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517507. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

தரும் பொருள் சிறியதே: பெறும் அருள் பெரிதே:

# மங்களமருளும் ஸ்ரீ மகாலக்ஷ்மி!



நம் பாரத நாட்டில் மங்கையர் பெருமைமிக்கவர்கள். 'சகதி' ஸ்வ ரூபமாகவே போற்றப்படுகினறனர். கன்னிப்பருவம் முதல் இறுதி வரை யில் காக்கப்படுகினறவளாகவும, பிறந்த வீடு புகழ் ஓங்கப் புக்ககத்தில் தம் மக்களேயும் கணவரையும் காப்ப வளவுமாகினற ஓர் உயர்ந்த உத்தம இனம் பெண்ணினம. மணம் முடிந்து, நல் மனையாளாய, தாயாய், மக்கட் செல்வங்களணைத்து, ஊட்டி வளாத் துத தன்னலந்துறந்து இல்லற தர்மம் கடைப்பிடிக்கும மங்கையராய், வரு விருந்து உவப்பவூட்டும் உபசரணை யில் 'அனனபூரணி' யாய், கணவரின் பிந்தைய வாழ்க்கையில் செவிலிய ராய்ப்பரிணமிப்பவர் மாதர் குலமே!

மணப்பருவமெய்திய கன்னிகை யின் உள்ளத்தில்தான் எததனை எத் தனை இன்பக் கோட்டைகள்! குதூகல மான வாழ்க்கையமையப் பெற்று உல்லாசத்தில் ஊஞ்சலாடும் எதிர் காலத் துடிப்புகள் போன்றன அவர்


திரு. M. S. பாலசுப்பிரமணியன்,
சென்னை-91


களுடைய வருங்கால எதிர்பார்ப்புக் கள். மாலையிட்ட மங்கையரின் கழுத்தில் அணிகலனாய் விளங்கப் போகும் திருமாங்கல்யதாரணம் தானே அவர்களின் இல்வாழ்க்கை யின் துவக்கத்துககோர் பச்சைக் கொடி. கவலை நீங்கிப் பெற்றோர் உள மகிழ்ந்து மனப்பூர்வமாக நல் லாசிக் கூறி வாழ்த்தியனுப்பும் நன் னாளல்லவா மணநாள்!

மனங்கவரும் மணாளன, மகிமை யுள்ள மஙகள நாண், மஞசள, குங் குமம, மாட்சிமிகு மனையாட்சி இவ் வளவுக்கும் மேல் வேறென்ன செல் பாக்யமிருக்கிறது? ஆயினும் வயது வந்த கன்னிப் பெண்கள இன்னமும் திருமணமாகாமல பல வருஷங்களாக 'விமோசனம்' வராமல் ஏங்கிக் கிடககின்ற ஒரு நிலையும், அவர் களின பெறறோர்கள் பட்டுவரும் துயரமும் கவலையும் நம்மைக் கல

கலங்கவைக்கின்றனவே! நலலகாலம வெகு விரைவில் நாடி வரும் என்ற தளராத நமபிககையிருநதும் ஏனோ தாமதப்பட்டுக கொணடு வருகிறது அன்றி எத்தனையோ தடஙகலகள காரணமறியோம 'ஒரு தாலிககயிறு. மூனறு முடிசசுககள தங்கள பெண களின கழுததில் எபபோது விழும்'? எனபதே இந்நாளில் பல பெறறோா களின கவலை

தெயவ வலு இருநதால, அருள நிறைநதால் தோஷமனைத்தும பறந தோடிப போகுமே!

பிரதி ஸோமவாரஙகளிலோ (திங கட் கிழமை) சுககிரவாரங் (வெள்ளிக் கிழமை)களிலோ (மணமாக வேணடி யவர்கள் ஸோமவாரததிலும, மாங் கல்ய பலம வேண்டுவோா சுக்கிர வாரததிலும்) மங்களமருளும் ஸ்ரீ மகாலட்சுமிக்கு மஞசள் தூளினுல ஆாசசனை செயதுவரின் நறபலனை விரைவில பெறலாம திட நம்பிக் கையும் சிரத்தையும்தான் மிக்க அவ சியமாகும. அனனையினருளால் அதிக வரங்கள் பெறலாமனறோ?

தஞசை மாவட்டததில் ஞானக குழநதையான திருஞானசம்பநதா அவதரித்த சீகாழியெனும திருத தலம மிகவும் பிரசிததமானதென பதை அனைவருமறிவர். சீகாழி நக ரின மேற்கே ஒரு கிலோ மீட்டா தொலைவில ஸ்ரீ ஓசை கொடுதத நாயகி (ஸ்ரீ த்வனி ப்ரவர்த்தனி) ஸமேத ஸ்ரீ தாளபுரீஸவரர் திருக் கோயில் கொணடுளளதோா திருத தலம 'திருககோலக்கா' வாகும. இத்திருககோயிலில ஒரு தனிச் சநந தியில் வீற்றிருக்கும் ஸ்ரீ மகாலக்ஷமிக ககதான முற்சொல்லபபட்ட மஞசற் பொடி ஆாசசனை செய்கு நாடினை பெறுகின்றனர்.

சங்கல்பததுடன முறைப்படி அர்ச சனை செய்து வைககிறாா சிவநேசச செல்வா, சிவஞானச்சுடர், சிவாகம ஞான சாகரம சாக்தரதனம் ஸ்ரீ இராமநாத சிவாச்சாரியார் அவர்கள். மிகவும் பக்தி சிரத்தையாக அர்ச் சனை முடிநததும ஸ்ரீ மகாலக்ஷ்மிககுப பாலனனம நிவேதனம செயயப்படு கிறது. பினனா கறபூர ஹாரத்தி. அாசசனை, நிவேதனப் பிரசாதஙகள விநியோகிககப்படுகினறன. அவவ மயம பிரார்ததனை—அநுக்ரஹ ஆசீர் வாத மநதிரஙகளின கோஷம். ஒரு கணம் நாம நம நிலையிழநதுக கண களில் நீர் தேங்கிவழிய, திருமகளிடம மனததை ஒபபடைககிறோம என்றால் அதுமிகையாகாது

ஜாதகரீதியாய், கனனிபபெண் களுககுப் பொருததமான நக்ஷத்திரம் வரும நன்னாளில் ஆரமபித்துத் தங்கள் கோரிக்கைகள நிறைவேற திருவருள்புரியும்படிப பிராாத்தித்து ஒரு குறிபபிட்ட தினஙகளுக்கு மஞசள அர்ச்சனை செயவித்துப் பிர சாதங்களை யுட்சொணடு, மஞசள பிர சாதம் தரிததுவரின் ஸ்ரீ மகாலக்ஷமி யின் திருவருள் பரிபூரணமாகக கிட் டும் என்கிறாா ஸ்ரீ இராமநாத சிவாச சாரியார் அவாகள் நம்ப முடியாதது தான. எனினும இந்த சந்நிதியில நடைபெறற எணணற்ற அர்ச்சனைகள் பலனளிககத் தவறினதில்லை எனபதே உணமை விவாகம் நிச்சயமாகி விவாக சுப முகூாததப்பததிரிகையை நேரி லேயே வநது கொடுத்துவிட்டுப் போகிறாாகளே! அப்போது அமபா ளின அபார கருணையின மகிமையை எணணி உருகுவோ நான. அாசச னைககுவேணடிய சாமான்களும் மலிவு. எளிதிலும் எஙகும் கிடைககும. எலலாவறறையுமவிட உறுதியான நம்பிககைதான மிக மிக அவசியம். திருமகள்தான் ஸ்ரீ விஷ்ணுவின் மாா பிலுறைபவளாயிற்றே. சகல சௌ பாககியஙகளையும் அள்ளிததர சிததமா யிருககிறாள. ஏழை — தனவந்த ரெனறோ, தாழ்ந்தோர்—உயர்ந்தோர் என்றோ பேதம கிடையாது. எச்சம யததினரும் எப்பாலரும பிராாததித் துக்கொணடு இதில் ஈடுபடலாம் என் கிறாா அவா

மேறபடி மஙகளமருளும ஸ்ரீ மகா லக்ஷ்மியின் சநநிதியில பூஜையின இறுதியில் பாடப்பட்டுவரும் பிராாத தனை ஸலோகஙகளை வாசக நேயா களின் நலனகருதி கீழே கொடுத்திருக கிறேன். எல்லோரும இன்புற்று வாழவாராக!

1. ஆதிலக்ஷமி நமஸதேஸது பரபிரமம ஸவரூபிணி
   யசோ தேஹி தனம தேஹி ஸர்வ காமாமச்ச தேஹிமே!

2. ஸந்தானலக்ஷமி நமஸதேஸது புதர பௌதர பரதாயினி
   புத்ரான தேஹி தனம தேஹி ஸர்வ காமாம்சச தேஹிமே!

3. கீர்ததிலக்ஷ்மி நமஸ்தேஸது விஷ்ணு வக்ஷஸதலஸதிதே
   யசோ தேஹி சரியம தேஹி ஸாவ காமாமசச தேஹிமே

4. வித்யாலக்ஷமி நமஸதேஸது பிரமம வித்யா ஸவரூபிணி
   வித்யாந்தேஹி கலாநதேஹி ஸாவ காமாம்சச தேஹிமே!

5. தனலக்ஷமி நமஸதேஸது ஸாவ தாரிதரிய நாசினி
   தனநதேஹி ச்ரியந்தேஹி ஸாவ காமாமசச தேஹிமே!

6. தானயலக்ஷ்மி நமஸதேஸது ஸாவாபரணபூஷிதே
   தானயந்தேஹி தனநதேஹி ஸாவ காமாமசச தேஹிமே!

7. மேதாலக்ஷமி நமஸ்தேஸ்து கலி கலமஷ நாசினி
   பரஞ்ஜாம தேஹி சரியந்தேஹி ஸர்வ காமாமசச தேஹிமே!

8. கஜலக்ஷமி நமஸதேஸ்து ஸாவ தேவ ஸவரூபிணி
   அசவஞ்ச கோகுலந்தேஹி ஸர்வ காமாமச்ச தேஹிமே!

9. வீரலக்ஷ்மி நமஸ்தேஸ்து பராசகதி ஸ்வரூபிணி
   வீர்யந்தேஹி பலந தேஹி ஸர்வ காமாமசச தேஹிமே!

(20-ம் பக்கம் பார்க்க)




பெற்றுவரும சாலையில் ஜபம் செய்தால் ஒன்றுக்குப் பத்துப் பங்கு பலன். யாக சாலையாகிய அக்னிஹோத்ர சாலையில் ஜபம் செயதால் ஒன்றுக்கு நூறு பஙகு பலன. மஹான்கள் சித்தி பெறற ஸ்தலங்கள், பாடல் பெற்ற ஸ்தலங்கள் எனபனவற்றிலும் தெய்வீகமான ஆலய சநநிதிகளிலும செய்யும் ஜபம் ஆயிரம்-லட்சம்-கோடி பங்கு பலன் தரும். ஆனால் பெருமாள் சந்நிதியிலே செய்யும காயத்ரீ ஜபத்தின் பலனுக்கு எல்லை கூற இயலாது! அது அநநதமான பலன்தருவது என்கிறார் சிவபெருமான.

**எந்தெந்த ஆசனங்களில் அமர்ந்து காயத்ரீ ஜபம் செய்தல் வேண்டும்? அவற்றின் பலன எத்தகையது?**

இந்தக் கேள்வியை முன்னொரு முறை சில முனிவாகள கேட்டபொழுது ஸ்ரீ வியாச பகவான அளிதத விடை பின்வருமாறு:

1. தாபாஸனத்தில் உட்கார்ந்து ஜபம செய்தால பாவங்கள் போகும்.

# ஸ்ரீ காயத்ரீ ஜப க்ரமம்

திரு. ஆர். சததியமூாததி,
*திருப்பாப்புலியூர்.*

**ஆ**தியில் நான்கு வேதங்களுக்கும அரிய பெரிய பாஷ்யம் செய்தருளிய ஸ்ரீ வித்யாரணய பெருமானது காயத்ரீ பாஷ்யத்தினின்று ஒரு சில அரிய விஷயங்கள் :

காயதரீ தேவியினது பெருமை அறியாதவன், நானகு வேதங்களின கரை கண்டவனாயினும் அவனை இழி பிறவி எனறுதான கருதுவர் பெரியோர் என்று வியாசர் பெருமான எச்சரிக்கையிடுகின்றார். பெரியோர் வாக்கினின்று அவ்விதச சொல் பெறுதல் நலமன்று அன்றோ !

**வேதமாதாவை காயத்ரீ என அழைப்பதன காரணம் :**

அனபோடு கானஞ் (ஜபம்) செய்பவனைவிடாது பாதுகாப்பது எதுவோ அதனைத்தான் காயத்ரீ என்று அழைக்கின்றனர். காயத்ரீதான, வேதத்தின் தாய். காயத்ரீதான் பாவத்தைப் போக்கும் அன்னை ! காயத்ரீயினும் சிறந்தது இவ்வுலகிலும் இல்லை. அங்கும் (மேலுலகிலும்)]இல்லை. ஆகவே காயத்ரீதான் மிக மிகப் பரிசுதத மான மந்திரம் எனவும அப்பெரியோர் முரசறைகின்றனா.

**ஜபம செயவதறகு அமையும இடததிற் கேறப பலன:**

வீட்டில் பரிசுத்தமான இடத்தில் அமர்ந்து காயத்ரீ ஜபம் செய்தால் ஒனறுக்கு ஒன்றுதான் பலன. ஓடுகின்ற நீரோடை, நதிகரையில அமர்ந்து ஜபம செய்தால் ஒனறுக்கு இரண்டு பங்கு பலன். பசு போஷிககப்

(பரிசுத்தம உடலுக்கும் மனத்திற்கும் உடன் தோன்றும்).

2. கமபளியில் (இரத்தின கமபளத்தில்) அமர்ந்து ஜபம் செய்தால் துக்கம் (துனபம்) பாதிக்காது நீங்கும்.

3. மான் தோலில் அமர்ந்து ஜபம் செய்தால் ஞானம் வளரும். சாந்தம் பெருகும. மன அமைதியே ஒரு ஆனநதமல்லவா !

4. பட்டு ஆசனத்தில் உட்கார்நது ஜபம் செய்தால் பாக்கியம் விருத்தியாகும்.

5. மரவுறி பலத்தை வளர்க்கும். அனுபவததில உணரலாம். (ஸ்ரீராம பிரான உபயோகித்த பரிசுத்தமான

மரவுறியினம் மலையாள தேசத்தில் கிடைக்கும்.)

6. புலபத்திரம உடமபை சுத்தி செய்வதாம.

7. பெண் யானைத் தோலில அமர்ந்து ஜபம் செயதால அது பல வகை வியாதிகளையும போககும்.

ஜபம் எணணும முறை

சுண்டு விரலின் அடுத்த விரலுககு அநாமிகை எனறு பெயா. அதன இரண்டாவது கணு (பருவம) தொடஙகி, சுண்டு விரலின் முதல் வரை வழியாக மேலே வநது ஆள காட்டி விரலின அடிக்கணு வரை எண்ணி வந்தால், தொகையும் பத்து கிடைககும். நீணடு நிற்கும அடிக்கணுக்கணுககளாகிய இரணடை யும் ஒரு முறை வலம் வந்தது போலா யிற்று! இவவாறு செய்தலே "ஒரு மாமேருப ப்ரதட்சிணம" எனறும கூறப்படுகினறது. இநத மேருவை திடீரென்று தாணடக் கூடாதாம.

மாலைகளை உபயோகிததல் :

காமியமான கோரிக்கைகளை உல கின் தாயான காயத்ரீ தேவியிட மிருந்து பெற விரும்புவோா, பலவித மாலைகளை கைக் கொணடு ஜபம் புரிய லாம. அதன பலனும் பல மடங்கு அதிகமாகும. 'புத்ர ஜீவ' எனனும மரததின கனி கொணடு (மணி கொணடு) ஜபம் செய்தால் 1கரு 100 டங்கு பலன். பவழத்தால் மாலை கட்டி அதன மூலம ஜபம் செய்தால ஆயிரம் பஙகு பலன. முத்து மாலை கொணடு ஜபம புரியின் பதினுயிரம பஙகு பலன் பொனனினுல மணி செய்து ஜபம செய்தால லட்சம் பங்கு பலன தாப்பை முடியினுல் எணணிககை செய்து ஜபம இயறறல் கோடி பஙகு பலன தரும. துளசி மணி கொணடு ஜபம புரிதல் அநந்த மான பலன தரும் ருத்திராக்ஷ மணி கொணடு ஜபம் புரியின் அதன் பலன் தன்னுலும கூற இயலாது என்று பார்வதியை நோககி பரமசிவன் கூறி யிருப்பதாகப் புராணம் பேசுகினறது. குறிபபு மேலே தெரிவித்த புத்ரஜீவ மணி அலகாபாத்தில் கிடைக்கும். அது பதராக்ஷ மணியினும் பெரிய அளவில் மழுமழுப்பாகவும் இருக்கும்.

ஆசிரம வேறுபாட்டிறகு ஏறப ஜபம :

ஆசிரம வேறுபாட்டிற்கு ஏற்ப ஜபத் தின விசேஷ முறையை 18 ஸ்மிருதி கர்ததர்களில ஒருவராகிய 'இயமன' என்பவர் விளககுகின்றூர். பிரம்ம சாரி, கிருகஸ்தா இருவரும் 108 வீதம் காயத்ரீ ஜபம செய்ய வேண் டும். வனவாசத்தை மேற்கொணடு விளஙகும வானப்பிரஸ்தரும்,சந்யாசி களாக விளங்குமு 4 ஆவது ஆசிரமி களும் தினம் 2000 உருவுக்கு அதிக மாக ஜபம் செய்ய வேண்டும். (இது பெரியோர் மூலம் அறிதற்குரியது).

காயதரீ காலக் கட்டுப்பாடுகள் :

சிராரத்தம், பிரதோஷ வேளை, அமாவாசை ஆகிய நாட்களில் காயத்ரீ ஜபத்தை 10 முறை செய்தல தகும் வேதஙகளை கறகக கூடாத (அநத்தியபன) நாட்களில் 28 முறை ஜபம் செய்தலே போதுமானது. இவையல்லாத பிற காலஙகளில வழக கம் போல குறிதத அளவு ஜபம் செய யத்தான் வேணடும.

ஜப விதி :

காலையில கைகளைத் தூககி மலாத் திக் கொண்டும, மாலையில் மூடிய கை களோடும, நடுப்பகலில கைகளைக கீழ் அமர்ந்தபடி குறுக்காக வைதது க் கொண்டும் ஜபம் செயய வேணடும கைகளை வஸ்திரத்தினுல் மூடிக கொணடு (முககியமாக வலக்கையைப் போாததிக் கொணடு) ஜபம் செய்தல் சிறபபு என்று 'காயத்ரீ அனுஷ்டான தத்வ பரகாசிகை' நூல் விளககு கிறது

சாதாரணமாக வாயினுல உசசரிதது காயத்ரீ ஜபம் செய்தறகு பலன் ஒரு பஙகுதான; ஜபத்தினை முறை யாகச செய்தால 10 பங்கு பலன தரும். உதடு அசையும் அளவில் செய்தால் 100 பங்கு பலன. மனத தினுலேயே செயயின 1000 பஙகு பலன் அளிககும். உதடு அசையும அளவில் செய்யும் ஜபம் உபாமசு ஜபம என்று கூறப்படும. அதாவது பறகளை மூடிக்கொணடு நாவை மட டும அசைதது உதட்டால சததம வராமல செயயும் முறை உபாம சுவாம. நாம் முறைப்படி காயத்ரீ ஜபம் செய்து தேவியின அருளைப் பரி பூரணமாகப் பெறுவோமாக! ★

---

(18-ம பககத் தொடர்சசி)

10. ஜயலக்ஷ்மி நமஸதேஸது ஸர்வ
காரய ஜயபரதே
ஜயந்தேஹி சுபநதேஹி ஸர்வ
காமாமச்ச தேஹிமே!

11. பாகயலக்ஷ்மி நமஸதேஸது ஸௌப
மங்கலய விவர்ததினி
பாக்யந்தேஹி ச்ரியந்தேஹி ஸர்வ
காமாமச்ச தேஹிமே!

அசோக்யலக்ஷ்மி நமஸதேஸ்து
ஸர்வரோக நிவாரணி
ஆயுர்தேஹி சரியந்தேஹி ஸர்வ
காமாம்ச்ச தேஹிமே!

13 ஸிததிலக்ஷ்மி நமஸதேஸது ஸாவ
ஸிததி பரதாயினி
ஸிததிந்தேஹி சரியந்தேஹி ஸர்வ
காமாம்சச தேஹிமே!

14. ஸௌந்தாயலக்ஷ்மி நமஸதேஸது
ஸர்வாலஙகாரசோபிதே
ரூபந்தேஹி ச்ரியந்தேஹி ஸாவ
காமாம்சச தேஹிமே!

15. ஸாமராஜயலக்ஷ்மி நமஸதேஸது
புததி முக்திபரதாயினி
மோக்ஷந்தேஹி சரியந்தேஹி ஸர்வ
காமாமசச தேஹிமே!

மஙகளே மங்களாதாரே
மாங்கல்யே மஙகலபரதே
மஙகளாாததம மங்களேசி
மாஙகலயம தேஹிமே ஸதா

புத்ரான் தேஹி தனந்தேஹி
ஸர்வ காமாம்சச தேஹிமே
ரூபமதேஹி ஜெயந்தேஹி
யசோ தேஹி தவிஷோஜஹி.






வேதத்தின் ஒரு பகுதியான பு ஸூக்தம் திருமகளின் பெருமையைக் குறிப்பாகச சுட்டுவதாகச் சான்றோர் கருதுவர். படைத்தல், காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்களை முடிவில்லா விளையாட்டாகச் செய் யும் திருமாலின் திறனுக்குக் காரணம் திருமகளே என்பார் பட்டரும். நீளா ஸூக்தம், "இந்த உலகைத் ஆளத்தக்கவள் விஷ்ணு பத்தினியே" என்று உறுதி கூறுகிறது.

"அஸ்யே சா நா ஜகதோ விஷ்ணு பத்நீ

என்பது அத்தொடர். திருமாலின காரியம் யாவிலும் கைகொடுப்பதற் காக அகலாது நின்று தொழில் புரிய ஏற்ற உருக்கொள்கிறாளாம் திருமகள் இதை விஷ்ணு புராணம் விரிவாகச சொல்லுகிறது.

"இந்தப் பெரிய பிராட்டியார் எம்பெருமான் தேவனாக இருக்கும் போது தேவரூபம் கொள்ளுகிறாள் மனித அவதாரம் ஏற்கும் போது மனித உருக்கொள்ளுகிறாள். மகா விஷ்ணுவின் திருமேனிக் கேற்றவாறு தன் திருமேனியை ஆக்கிக் கொள் ளுகிறாள்."

தேவேத்வே தேவ தேஹேயம்
மநுஷ்யத் வேந மாநுஷீ
விஷ்ணோர் தேஹாநு ரூபம்
வைகரோத்யேஷாத்மநஸ்தநும்
—விஷ்ணுபுராணம் 1-9-14

# திருவருளுக்கு ஒரு திருமகள்

உலகின் சமயங்களில் ஸ்ரீ இணைத்து அழைக்கப்படும் ஒரே சமயம் ஸ்ரீவைஷ்ணவம்தான்! திருமகளுக்கு முதலிடம் தந்து, அன்னைமூலம் தந்தையருளைப் பெறும்முறை வைணவத்தின் தனிச்சிறப்பு. திருமகள் திருமாலிடம் புருஷகாரமாயிருக்கிறாள் என்பர் வைணவச் சான்றோர். பகவானைவிட பாகவதர்கள் ... அதாவது திருமாலடியார்கள் ... சிறந்தவர்கள் என்ற வைணவக் கொள்கைக்கேற்ப திருமாலின சிறப்புக்கெல்லாம் திருமகளே காரணம் என்பது வைணவச் சான்றோர் வாக்குகளால் தெளிவாகும்.

திரு. ஆர். பி. சாரதி. M.A., M Ed.
சென்னை-44

பெண்ணுரிமை முழக்கம் செவிட பறைகளைக் கிழிக்கும் இந்நாளில் கூட திருமணம் ஆன ஒரு பெண் திருமதி சீநிவாசன், திருமதி. நாராயணன் என்றே குறிப்பிடப்படுகிறாள். பெரும் பாலும் இன்று பெண்ணுக்கு முகவரி இன்னார் மனைவி என்பது தான் ஆனால் பாவம் ஸ்ரீமந் நாராயணை எவ்வாறு குறிப்பிடப்படுகிறார்? எவ் வாறு இனங்காட்டப்படுகிறார்?

'திரு இருந்த மார்பன, ஸ்ரீதரன் '
—நான்முகன் திருவந்தாதி

'திருமகளார் தனிக் கேள்வன '
—திருவாய்மொழி

(திருமகளார் என்று மரியாதையான சொல்லும கேள்வன் என்ற சாதாரண வழக்கும் சிந்தனைக்கு விருந்து)

பந்திருக்கும் மெல விரலாள பாவை
பனிமலராள்
வந்திருக்கும் மார்வன
—பெரிய திருமொழி

'ஒண் தாமரையாள் கேள்வன '
—முதல் திருவநதாதி

இப்படிப்பட்ட அறிமுகம் தான ... அர்ச்சனைதான் திருமாலுக்கு உகப்பும் கூட!

பல்லாண்டு பாடும் பெரியாழ்வாா மணிவண்ணனுடைய தோளையும், தாளையும் முதலில் வாழ்த்துகிறார் .. ஆனால், 'அவன் தோளின் திறனுக்கும் தாளின் அருளுக்கும் காரணமானவள் திருமகள் அல்லவா?' என்ற நினைவு விரைகிறது.

'வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பலலாண்டு!' என்கிறார். பெரியாழ்வாரின் ஒரு மகள் .. திருமகள் போன்றவள் செங்கண்மாலால் ஆட்கொள்ளப்பட்டவள் திருமகள் கீர்த்தியை மிக நேர்ததியாகக் குறிக்கிறாள். ஆலிலே துயின்ற 'மால்', கம்சன வயிற்றில் நெருப்பாய் நின்ற 'நெடுமால்' மாதவம் செய்து, கடல் கடைந்து, மாதவளைப் பரிசாகப் பெற்று அதன் பின்னரே செல்வத்திருமால் ஆவதை திருப்பாவை முடிவில் திறமையாகக் காட்டுகிறாள்.

நம் துயரைத் தீர்ப்பவன் நாராயணன். அவனே துயருற்றால்? அதைத துடைப்பது யார்? அவள் மாது ... திருமாது தான்!

...திரு மாது வாழ
வாட்டமில் வன மாலை மார்வனை
என்கிறார் குலசேகரர்.

திருமால் மார்பில்... மனதில்... திருமகள் உறைவதால் மட்டுமே அவன் மனம் தண்மையாக இருககிறது... அவன் மனமும வாடவில்லை... மார்பு மாலையும் வாடவிலலை என்பது குறிப்பு.

அநத வாடா மலர் மாலையணிநத மார்பு .. மலர் மகளே மாலையாக ஒளியும், மணமும் வீசும மார்புதான பாணனையையும் ஆட்கொண்டதாம்!

திரு
ஆர மார்பதன்றோ அடியேனை
ஆடகொண்டதே!
—அமலனாதிப்பிரான்

மாலுக்குக் கருணையே உருவான திருமகள மார்பில உறைவதனால்தான் யாரையும் இன்னார் இனியார் என நோககாது ஆட்கொள்ள இயலுகிறது.

திருமகள் திருமால் மாாபில் உறைகிறாளா? திருமால் திருமகள் மார்பில் உறைகிறாரா? ஒருவர் மனதில் ஒருவர் என இருவரும் இதயம் மாறிப் புகும் விந்தையால் திருமாலடியார்க்குக் கொணடாட்டமே!

'தேவப் பிரான்', 'தேவாதி தேவன' என்றெல்லாம் போற்றப் படும திருமால் திருமகள சேர்க்கையால் தேவதேவன, 'தேவ தேவ தேவனே' என்று முத்தேவராகி விடுகிறான்.

"திருக்கலநது சேரும் மார்ப! தேவ தேவ தேவனே!" என்கிறார் திருமழிசைப் பிரான்.

முதலாழ்வாருள் பொய்கையார் வையை விளக்கேற்ற, பூதத்தாழ்வார் அன்பு விளக்கேற்ற, பேயாழ்வார் "திருக்கண்டேன பொன்மேனி கணடேன்!" என ஆனந்தக் கூத்திடுகிறார். 'மனத்துள்ளான், மா கடல் நீருள்ளான், மலராள் தனத்துள்ளான" என்று திருமாலைத் திருமகள் மார்பிலே காண்கிறார். வையவிளக் கேற்றிய பொய்கையாரும் முனனரே அறிவார் மால்மனம் திருமகள் மனம் மீதுதான் என்று! அவர் பாடுகிறார்.

திருமகளும், மண்மகளும்,
ஆய்மகளும் சேர்ந்தால்
திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்?
—திருமகள் மேல
பாலோதம சிந்தப படநாகணைக் கிடந்த
மாலோத வண்ணர் மனம?

நாலாயிர திவ்யப் பிரபநதத்தில் திருமகளைத் தனியே பரவி புகழ் பாடும் பாடல்கள் இல்லையே என்ற குறையை ஆச்சாரியார்கள் போக்கி விட்டார்கள்.

கருணாகரன் என்ற புகழ்ப் பெயா கொண்டவன் சக்கரவர்த்தி திருமகன. சரணாகதவத்ஸலன்... ஆனால் ராமன் கூடத் தன்னைச் சரணடைந்த ஓரிருவர் சுக்ரீவன்... வீடணன் ஆகியோரைத்தான் காப்பாற்றினான்!

ஆனால் திருமகளான சீதை பெரிய பிராட்டியோ தன்னை மிரட்டியும் அச்சுறுத்தியும் பலவகையாலும துன புறுத்தி அழச்செய்த அரககியரையே அநுமனிடமிருந்து காத்தவள் அல்லவா?

அதனால் ராமனைவிடப் பலமடங்கு உயர்ந்துவிட்டாளாம் பிராட்டி. இது பட்டர், பிராட்டிக்குச் சூட்டும் புகழாரம்!

பட்டர் அருளிய "குணரத்ன கோசம்" பிராட்டியின் குணமணிகளால் ஒளிரும் ஒப்பற்ற நூல்.

திருமாலடி பற்றும் அடியாா வரவு நோககி, அவாகட்கு பரிந்து பேச மாலின் முன் வணங்கி நிற்கிறாளாம் அனனை!

அன்னையின் அருளை எண்ணி வியககிறார் பட்டர்! இன்று லௌகீக வழக்கில் வழங்கும் ஸ்ரீ என்ற சொல்லின் முதல மூல நாயகி, ஸ்திரி ...ஸ்ரீ... திருமகள் தான்!

வேதாந்த தேசிகன் ஸ்ரீ ஸ்துதியில திருமகளை மங்கல நிலையம், கருணா விலாசம், காமதேனு என்றெல்லாம போற்றுகிறார்.

திருமாலின் தேஜஸுக்கும், கலைமகள் சொல்லுககும், உமை-சிவன் காதலுக்கும் திருமகளே காரணம் என்கிறார் தேசிகன்!

இரணியனைக் கொன்ற சிங்கப் பிரான் சீற்றம் தணிக்க வந்த சீதேவியை கவிஞர் "முந்தா உலகும, உயிரும் முறை முறையே தந்தான்" என்று குறிப்பிடுவது திருமகள் முழு முதற் காரணி என்பதை உறுதி செய்கிறது!

இக்கருத்து ஆதிசங்கரரின் கனக தாராவிலும முன்னரே கூறப்பட்டது தான்.

நா மகளும், மலைமகளும, நல்லருட திருமகளும்
நற்றொழில மூனறனுக்கும நாயகியும் நீயலவோ ?
—'பொன்மழைபொழிக'

அன்றாட வாழ்வில் கூட திருமகள் அஷ்டலட்சுமி என்று அழைக்கப்படுகிறாள். வித்யா லட்சுமி, வீர லட்சுமி ... துர்க்காலட்சுமி' என்று கூட கூறப்படுவதுண்டு.

கவிச்சககரவாத்தி கம்பன் வாமானவதாரக காட்சியை ஒரு சிறுகதையாககி முடிவில் ஒரு காட்சியைத் தீட்டுகிறார். மூவுலகும் தாய முகுந்தன வாமனன் திருவடிகளை மடியிருத்தி மெல்ல வருடுகிறாளாம் வாட்டம நீக்க!

ஆனால் மலர்மகள் மலர்க்கரம பட்டவுடன் திருமால் திருவடி சிவநதது காட்டியதாம்.

" திருமகள் கரந்தொட சிவந்து காட்டவே!"

இதன் விதை பூதத்தாழ்வார் அருளிய "வாமன் திருமருவு தான்" என்ற தொடரில் தோன்றியிருக்கலாம்!

கவிஞர்கள் கலைமகளை நாடுபவர் என்றாலும திருமகளைப்பாட மறககமாட்டார்கள்.

வள்ளல் பெருமாள் கூட,

"உலகம் புரக்கும் பெருமான் தன்
உளததும புயததும அமர்ந்தருளி
உவகை அளிக்கும் பேரின்ப உருவே
எல்லாம் உடையானே!"

என்று திருமகளைத துதிக்கிறார்!



ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம சுவாமி கோவில்-வேதாத்ரி (ஆ.பி.)

மகாகவி பாரதி திருமகளை நாரணன் மார்பில் மட்டும் காணவில்லை. தோரணப் பந்தரில், பசுத்தொழுவில், சுடர்மணி மாடத்தில், வீரர் தோளில், வியர்வை சிந்தி உழைப்பவர் தொழிலில், பாரதி சிரத்தில், பூவில, சாந்தில், விளக்கில், கன்னியர் நகைப்பில், காட்டில், பொழிலில், கழநியில், துணிவில், மண்ணுட் கனியில், மலையில், கடலாழத்தில், வேள்வியில், பாட்டில், கூத்தில், படையில் நாவலர் மொழியில் என்று எங்கெங்கும் காண்கிறார்.

செல்வமெட்டும் எய்தி—நின்னால்
செமமை ஏறி வாழ்வேன்
இல்லை என்ற கொடுமை — உலகில்
இலலை யாக வைப்பேன!

என்பது பாரதியின பிரார்த்தனை!

திருமகள் பதம் பணிபவாக்கு,

"சித்தம தெளிந்திடும் செய்வினையாவும் திருத்தமுறும்
நிததம மறிதெழும் செல்வமும் தங்கி நிலைபெறும—நல
முத்தர்க்குரிய பெரும்பதம் வாய்க்கும்..."

என்கிறார் கவிமணி.

முடிவாக மண்ணில் இன்பமும், மற்றைப் பேரின்பமும் அருள வல்லவள் திருமகளே! திருமகள் கிருபை வருளை வேண்டாதார் இலர். புகழ் பெற்ற ஓர் இந்து சாம்ராஜ்யம் தோன்றக் காரணமாயிருந்ததும் திருமகள் திருவருளே! ஸ்ரீ வித்யாரண்யர் திருமகள் திருவருளைநாடினாராம் மறு பிறவியில் அப்பேற்றைப் பெற விதிக்கப்பட்டிருந்தார். சங்கரர் போலத் துறவை ஏற்றார். துறவு புதுப்பிறவிதான .. துறவிக்கு செல்வத்தால் என்ன பயன்? சீடர்கள் ஹரிஹரர், புக்கர் மூலம் விஜயநகரப் பேரரசை உருவாக்கினாராம்!

இன்று செல்வம் கொழிக்கும் பம்பாயின் சீர்மைக்குக் காரணம் மகாலட்சுமி கோயிலே என்கிறார்கள் மக்கள்! ஜைன சமயத்தைச் சார்ந்த மார்வாரிகளகூட தீபாவளியை ஒட்டி மஹாலக்ஷ்மி பூஜை செய்து புதுக் கணக்கைத் தொடங்குகிறார்கள்!

நாமும் 'இன்று புதிதாய்ப் பிறந்தோம்' என்று எண்ணி, திருமகள் திருவருளை வேண்டுவோம்!

"செல்வத்திருமகளை திடங்கொண்டு
சிந்தனை செய்திடுவோம்
செல்வமெல்லாந்தருவாள்,
நமதொளி திக்கனைத்தும் பரவும்
—பாரதி

# கந்தரலங்காரச் சிந்தனைகள்

திரு. வே. சோமசுந்தரம்,
சென்னை—61.

அழகுக்கோர் தெய்வம் ஆறுமுகன். அதனாலேயே முருகன் என்றழைக்கப் படும் முழுமுதல்வன். அவன நம் ஆன்மாவை ஈடேற்றவல்ல பற்றுக் கோடாவான். அப்பொருள்படவே கந்தனென்றுச் சொல்லப்படும் கருணை மூர்த்தியாவான. அவனுககுக் கோயிலிலே செய்யப்படுவது மலர லங்காரம். அருணகிரிநாதரால் தமிழ்ப்பாவிலே செய்யப்பட்டது கந தரலங்காரம்.

மயிலேறும் மாணிக்கமாகிய கந்தப் பெருமானின் உடலழகு காண்பாரைக காந்தமென ஈர்க்கவல்லது. கறகண டென அடியாா தம் நெஞ்சிலே நிறைந்திருந்து இனிக்கக்கூடியது. அவன திருப்பெயரை ஒரு முறை சொனனாலும போதும். சொன் னவர் குடி முழுதும் உய்யும். அவ னுக்கு மயிலே வாகனம். அம்மயிலோ அவனடியாரைக் காக்கும். அவன் கையில் பிடித்திருப்பது வேல். அத னால் தீரும் தொண்டர்தம் பிணி யாவும். அவனுககுச் சேவலே கொடி யாகும். அக்கொடி கந்தவேல் கரு ணையின் விளக்கமாகும். அவன கைப் பிடித்தது தெய்வயானை, வளளி என்ற இரு மங்கையர்த் திலகங்களை. அவர் களால் அடியார்களுக்கு வாய்த்தது, முருகப்பிரானை எளிதில் சென்றடை யலாம என்ற பெரும யோகம். எனவே கநத நாயகனின் வடிவமும், ஊர்தியான மயிலும், தாங்கிய வேலும், உயர்த்திப பிடித்த சேவலற் கொடியும், அணைத்திருக்கும் வள்ளி யும், தெய்வயானையும், ஓதுவாரை உயர்த்தவல்ல முருகா என்ற நாமமும சிறந்தவை, உயர்ந்தவை. எவ்வுயி ரையும் உயர்த்தவல்லவை. அவற் றின அருமைப் பெருமைகளை அழகுத் தமிழில் அனைவருக்கும் விளக்குமாறு உரைப்பதே அருணகிரிநாதரின் கந்த ரலங்காரமாகும். கூடவே, அறத் திலே பற்றுக்கொணடு, உடலும், செல்வமும் நிலையாவென உணர்ந்து, யமபயம தவிர்த்துப் பெண்ணாசைத துறநது, முருகனைத் தொழுது நன னிலை எய்துமாறு இந்நூலின்கண் அறிவுறுத்தப்பட்டுள்ளது.




அருணகிரிநாதரை அறியாத முருக பக்தர் யாருமிருக்க முடியாது. முரு கனே முன்வந்து ஆட்கொண்ட அடி யார் அவர். அவனே அடியெடுத்துக் கொடுக்கவும், கவி பாடும் ஆற்றலைத தரவும், அவனையே பாடு பொருளாகக கொண்டு பற்பல பாடல்களைப் பாடிய பெரியவர் அவர். அவருடைய "திருப்புகழ்" பாடலகள் நடையழ கும், சந்தத தனியழகும வாய்ககப் பெற்றவை. அவையாவும் சாகா வரம பெறற அதே நேரத்தில், பாடு வோர்கககு முருகனருளைப் பெற்றுத் தரவல்ல ஒப்பற்ற பாடலகளாகும். அவற்றின் உயர்வு கருதியே, 'வாக் கிற்கு அருணகிரி" என்ற சிறப்பும் அவரைப்பற்றி எழலாயிற்று.

அருணகிரிநாதர் திருப்புகழோடு கந்தரந்தாதி, கநதரலங்காரம், கந்தரநுபூதி, திருவகுப்பு, உடற்கூறு வண்ணம் என்ற பிரபநதங்களையும இயற்றியருளி இருக்கிறார். அவற றிலே முருகப்பிரானின் புகழ் மொழி கள் பொதிந்துள்ளன. அவற்றின் சிறப்பைக் கூறப் புகுந்தால் ஒவ் வொரு பாட்டுகளும் பலபட பொருள் விரித்துச் செல்லலாம்.

இக்கட்டுரையின் நோக்கம, கந்த ரலங்காரத்தின சிறப்பை வெளிப் படுத்துவதாய இருப்பதால் நம கவ னத்தை அதன்கண் பதிப்போம்.

அருணகிரிநாதர் திருவண்ணாமலை யில் ஒரு கணிகையிடத்தே பிறந்தவர். அவருக்கு ஒரு தமக்கையார் உண்டு. பிறநத இடத்தின் பெயராலேயே அருணகிரி என்றழைக்கப்பட்டார். சிறு வயதிலேயே தாயை இழந்துவிட் டார். தமக்கையின் அரவணைப்பில் வளர்ந்தவர். அதிகமாக கல்வியில் தேர்ச்சி பெறவில்லை. ஆனால் காளைப் பருவம் அடைந்ததும் கட்டழகியரை நாடிச் சென்று அவர்தம் நலம் துய்ப் பதில் நாட்டம் கொண்டார். அதி லேயே தம் வீட்டுச் செல்வம் அனைத் தையும் தொலைத்தார். தொழு நோயைப் பரிசாகப் பெற்றார். தம்பி யின் இழிநிலைக்கு வருந்தும் உள்ளத் தவரான தமக்கையிடம் வந்து தம் காமப்பசி தீர தேவையான பொருள் வேண்டி நின்றார். அவருக்காகவே எல்லாப் பொருளையும் இழந்து நினற தமக்கையார் கிளர்ந்து வந்த கோபத் தால் அருணகிரியாரைப் பார்த்து, "தம்பி, நீயும், நானும் ஒரே தாய்க் குப் பிறந்திருநதாலும் யாரென்றறி யாத வேறு வேறு தகப்பன்மார்க்குப் பிறந்தவாகள். எனவே உனக்கு வேண்டிய செல்வப் பொருளைத் தர முடியாத என்னிடம் பெண் வடிவம் மட்டும் உள்ளதால் என்னிடமே கூடி உன் இச்சையைத் தீர்த்துக் கொள்" என்று கூறினார். தமக்கையார் தம் இயலாமையையும், தம் பிறப்பின் இழிவையும், தம்பியின் நலிவையும் கருதி அவ்வாறு அழுதவாறே சொல்லிவிட்டார். அதைக் கேட்ட அருணகிரியாருக்கோ அனலிட்டார் போல் உடலும், உளளமும் நொந் தது. அகக்கண் திறந்தது. தாயினும் மேலாயத் தமமை ஆதரித்து வளர்த்த தம தமக்கையின் வாயினின்றும் தகா தன வருமளவிற்குக் கீழ்மகனாய்த் தமமை நடக்கத் தூண்டிய தம்முடலை வெறுத்தார். வாழ்வைத் துறக்க முடிவெடுத்தாா. நேரே திருவண்ணா மலை கோயில் கோபுரத்தைச் சென் றடைந்து, அதன் உச்சிமீதேறி, அங் கிருநது கீழே குதித்துவிட்டார்.



குருந்தமலை

அப்போது அங்கே ஓர் அற்புதம் நிகழ்ந்தது. முருகப்பெருமானே மனித வடிவில் திருநீறு பொலியும் குருநாதராக வந்து அவரைத் தம் திருக்கரங்களில் தாங்கி நிலத்திலே பத்திரமாக இறக்கிவிட்டான். அத் தோடு அவர் உய்வதற்கான மந்தி ரோபதேசமும் செய்தான். அருண கிரியாரைப் பிணித்திருந்த தொழு நோயும் மறைந்தொழிந்தது. அன்று தொடங்கி ஆறுமுகனின் அருட் புகழை ஓதத் தொடங்கிய அருண கிரியார் இறுதியில் கிளி வடிவாகி மீனாட்சியம்மையின் திருக்கரத்தில் சென்றடையும் வரையிலும் பல செந் தமிழ்ப் பனுவல்களை அருளியுள்ளார்.

அருணகிரிநாதரின் ஆரம்ப கால வரலாற்றை அறிந்தால்தான் அவர் பெண்ணாசையை வெறுத்து பல பாடல்கள் பாடியிருப்பதன் மர்மம் நமக்குப் புலப்படும். கந்தரலங்கா ரத்திலும் அவ்வாறான பாடல்கள் உள்ளன. அவற்றிலே யொன்றில்,

" பாலே யனைய மொழியார்த மின்
பத்தை பற்றியென்றும்
மாலே கொண்டுய்யும் வகையறி
யேனமலர்த் தாள்தருவாய் "

என்று மாலோன் மருகனை செவ்வேலவனை நோக்கி வேண்டுகிறார் அருணகிரிநாதர். "பாலைப்போன்று இனிக்கும்படியாகப் பேசும் பெண்களிடத்தேபெறக்கூடிய இனபத்தையே விரும்பினேன். எப்போதும் அவர்கள் மீதான மயக்கத்திலேயே ஆழ்நது விட்டேன். அதனால் பிழைக்கும வழி யறியேன். எனவே உன மலர் போன்ற திருவடிகளை அடியேனுக்குத் தந்தருள்க. அப்போது நான் உய்வேன்" என்பது இப்பாடலடிகளின் கருத்தாகும்.

பால் நம் உடலுக்கு நன்மையளிப்பது. அதைப்போலவே பெண்களின் உறவும் தமகக் உரமளிக்கும் என்று எதிர்ப்பார்த்தார அருணகிரியார். ஆனால் அந்த நினைப்பு வெறும் மயக்கமாகவே அமைந்திருந்தது. போதை வயப்பட்டவன் எப்படி நனமையையும், தீமையையும் பிறழ உணர்கிறானே, அவ்வாறே பெண் மயக்கத்திலாழ்ந்திருந்த அருணகிரியாருக்கும் சிறுமை சேர்க்கும் சிற்றிடையார் தொடர்பு பெருமை தரும் என்பதாகத் தோனறியது. நல்ல வேளையாக முருகன் அவரை ஆட்கொணடருளினன்.

இங்கே நாம், 'பெண்ணாசையை ஒழித்தல்' பற்றிச் சற்று தெளிவு பெறுவது நலம். ஆணும், பெண்ணும் சேர்ந்து வாழ்வதே இவ்வுலகத் தியற்கை. கணவனும், மனைவியுமாக வாழும் இல்லறத்தை நம் பெரியோர் இகழ்ந்துரைத்ததாகக கொளவதறகில்லை. வெறும் உடல் இன்பததையே பெரிதெனக் கொணடு பெணணை ஒரு போகப் பொருளாக்கி இழிவுபடுத்தி, தானும் இழிந்து போகின்ற ஈனச் செயலில் ஓர் ஆண்மகன் ஈடுபடலாகாதென்ற கருததே 'பெணணாசை ஒழிதல் வேண்டும்' என்று சொல்லும்போது வற்புறுத்தப்படுகிறது. மேலும், 'பிறன் மனை நோக்காத பேராண்மை' யை வலியுறுத்தும் திருவள்ளுவரின் அறவுரையும், 'கட்டிய மனைவியைக்கூட பெற்றெடுத்த தாயாகவும், உடன பிறந்த சகோதரியாகவும் நோக்கு வேண்டும்' எனற காநதியடிகளின் அறிவுரையும் நாம் உயர்வடைவதற்கான சீரிய சிந்தனைக் கருவூலங்களால் மிளிாகின்றன

அடுத்ததாக, அருணகிரிநாதர் நம் உடலானது ஐமபுலன்களின பிடியில் சிக்கி அல்லற்படுவதற்காக வருந்துகிறார். ஆறுமுகன் அருள் பெற்றாலொழிய நாம் உய்யும் வழியில்லை என்று தேறுகிறார். அவனைத் துதிக்கவும் செய்கிறா. ஐமபுலனாலான மனிதவுடலானது நீர்க்குமிழிக்குச் சமமானது. அது என்றைக்கும் நிலைத்திருக்கப போவதில்லை. இவ்வுடலைக் கொண்டு உழைத்துச் சேர்க்கும பொருட்செல்வமோ மின்னலைப் போன்றது. வந்த வேகத்தினும் விரைவாக நம் கையைவிட்டுப் போய் விடும். இவ்வுண்மையை அருணகிரியாரின் வாக்கிலே கீழே காணலாம்.

"நீர்க்குமி ழிக்கு நிகரென்பர் யாக்கை
நிலலாது செல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு
மென்பர்......"

தப்பித்தவறிசெல்வமானதுநம்மிடம் நிலைத்திருந்தாலும்கூட நாம் சாகிற போது நம்முடன் தொடர்ந்து வரப் போவதில்லை. இதற்கு அருமையான எடுத்துக்காட்டொன்றைக் கூறுகிறார் அருணகிரிநாதர். நாம் வெயிலிலே சென்றால் நம உடலின் நிழல் தரையிலே விழும. ஆனால் அந்த நிழலிலே ஒதுங்கி நாம வெயிலிலிருநது தப்பிததுக கொளள முடிவதில்லை அதைப்போலவே சேர்த்து வைத்த செலவமும நமமுடைய கடைசி காலத்தில் உதவாது.

" வெய்யிற் கொதுங்க வுதவா
வுடம்பின வெறு நிழல்போல்
கையிற பொருளு முதவாது காணும்
கடை வழிக்கே "

என்பது அருணகிரியார் வாக்கு.

யாக்கையும் நில்லாது, செல்வமும உதவாதென்றால் செய்ய வேண்டுவதென்ன? அருணகிரிநாதரின் அறிவுரையைக் கேட்போம.

"தடுஙகோள மனத்தை விடுங்கோள்
வெகுளியைத் தானமெனறும்
இடுங்கோள் இருந்தபடி இருங்
கோள்..."

அலைபாயும் மனதை தடுத்து நிறுத்தல் வேண்டும். கண்டதற்கெல்லாம் கோபப்படுவதை ஒழித்தல் வேண்டும். தன்னாலான தருமத்தைத் தக்கவர்க்குச் செய்தல் வேண்டும். முருக தியானத்திலேயே ஒரே சிந்தனையுடன் இருந்தபடி இருத்தல் வேண்டும். அவ்வாறான ஏக சிந்தனையைத தரக்கூடிய தோத்திரப் பாடலாக அமைந்திருக்கும் கந்தரலங்காரத்தின் 23ஆம் பாடல் பின்வருமாறு

"தெய்வத் திருமலைச் செங்கோட்டில்
வாழும் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவ
னேமற வேனுனை நான்
ஐவர்க் கிடமபெறக் காலிரண் டோட்டி
யதிலிரண்டு
கைவைத்த வீடு குலையு முன
னேவநது காத்தருளே "

இதன் பொருள: திருச்செஙகோட்டில் வாழும செழுமையான சுடர் போன்றவனே! கூாமையான வேலாயுதத்தைக் கொண்டவனே! மெய், வாய், கண, மூக்கு, செவி என்ற ஐம் புலன்களோடு இரண்டு கைகளையும், இரண்டு கால்களையும் சேர்த்து உண்டாக்கிய இவ்வுடம்பானது அழியககூடியது. அதறகு முன்னால் உனனை மறவாத என்னைக் காததருள்வாயாக!

அருணகிரியாரின் இனனொரு சிநதனை யம பயம் பற்றியதாகும். "கூற்றுவன் பாசத்தினால் பிடிககும பொழுது வநது அஞசல எனபாய்" என்று முருகனிடம் வேண்டிக கொள்பவரே, இன்னொரு பாடலில்,

"தண்டா யுதமும் திரிசூல மும்விழத்
தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன் "

என்று எமனையே வெட்டி வீழ்த்தி விடத் தம்மாலாகுமென்று கூறுகிறார்.

இவ்விரவுரையானது முருகனிடம் கொண்ட பக்தி எனற ஞானவாளின் துணையிருப்பதால் வெளிப்பட்ட தாகும். எனவே, முருகனை வழிபடு பவர்கள் யமனுக்கும் அஞ்சாத நிலை பெறுவார்கள் என்பது தெளிவு.

அருணகிரிநாதருககு முருகன ஞானத்தை வழங்கினன். யான், எனது என்ற ஆணவமிழந்த நிலையில் அவருக்கு வாய்த்த அருட்கொடை யாகும் அது. உயர் ஞானமாகிய வெறுந்தனியை அருணகிரிநாதர் தெளிய விளம்பினன ஆறுமுகவன். அவருக்கோ அது சொல்லும் தரமான தாயில்லை, சொல்லுக்கப்பாற்பட்ட உயர் சுகமளிப்பதாய் அது விளங் கியது.

"வானனறு காலன்று தீயன்று
நீரன்று மண்ணுமனறு
தானன்று நானன் றசரீியன்று
சரீரியன்றே"

என்று தமக்கு அதற்கு முன்னல் தெரிந்திருந்த எதுவாகவும் அவ்வுயர் ஞானமாகிய 'எல்லாமிழந்த சும்மா விருககும் சுகம்' இல்லையென்று புகல் கின்றார் அருணகிரிநாதர்.

அருணகிரிநாதருக்குக் கிடைத்த ஞானத்தெளிவு அவராக ஆறு முகனை நாடிச் சென்று வேண்டிப் பெறறதல்ல. அவனாக வந்து அவரை ஆட்கொணடருளினன். இதையறிய வரும நம்மில் சிலர் ஓர் ஐயத்தை எழுப்பக்கூடும. அருணகிரிநாதரின் ஆரம்ப கால வாழ்க்கை முறையான தாக இல்லை. அப்படியிருகக அவருக் கருள்வதறகாக கந்தப்பிரான் தானே நேரில் வநதான். எனவே, 'நல் லொழுக்கம் தவறி வாழ்ந்த அருண கிரியாரை ஆட்கொண்டவன் ஒரள விறகு முறையான வாழ்க்கையும், இறைவனிடத்து பய பக்தியும் கொண் டவர்களாகிய நம்மையும காத்தருள வந்தாலென்ன?' என்று வினு எழுப் பக்கூடும். இங்கே நாம் ஒனறை மறந்துவிடக் கூடாது. அருணகிரி நாதர் பெண்ணாசையை முழுக்க முழுக்க வெறுத்த நிலையில் தான் இந்த மனித உடலே பாரமென்று அதனையும் இழக்கத துணிந்தபோது தான் எல்லாப் பற்றும் விட்ட நிலை யில்தான அழகு மயில் வேலன் அவ ரைத் திருத்திப் பணி கொண்டான். மேலும் நம் முன்னோர்கள் பிறவிகள் பல உண்டென்றும், ஒவ்வொரு பிற வியும் முன்னைப் பிறவிகளின் வினைப் பயனுக்கேற்றவாறு அமையுமென்றும் அறிவுறுத்தியுள்ளனர். எனவே அருணகிரிநாதர் தம்முடைய முற் பிறவிகளில் மிகச் சிறந்த முருக பக்த ராய் விளங்கியிருத்தல் வேண்டும். கூடவே அப்பிறவிகளில் செய்திருந்த தீவினைப் பயனைத் துய்ப்பதற்காகவே ஆரம்ப நாட்களில் அல்லலுற நேர்ந் தது. அவ்வினைவலி தீர்ந்த நிலையில் பண்டைய முருக பக்தியின் பலனாக மயிலேறும் பெருமாளின் அருள் அவ ருக்குக் கிட்டியது. இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் நாமும் சிறநத இறை பக்தர்களாக விளங்க முற்படுவோமானல் இப்பிறவியில் இல்லாவிடினும் இனிவரும் பிறவி களில் ஏதேனுமொன்றில் இறுதியாக நிச்சயம் இறைவனருள் கிட்டப் பெற் றவர்களாவோம். எனவே பலவாறான வாழ்க்கைச் சிக்கல்களினல் சிதை வுறும் மனத்தினரான நாம் சிறிது இறைச சிந்தனைக்கும, வேணடுத லுக்கும் இடமளித்தல வேண்டும. இதுவே நாம் நலமடைய உள்ள ஒரே வழியாகும்.

இனி, அருணகிரிநாதர் ஆறுமுக னைப்பற்றி மொழிநதுள்ள புகழ் மொழிகளில் சிறிதளவு கருத்தினைச் செலுததுவோம.

சூரபனமனை அறியாதவர்கள் இருக்க முடியாது. அவன தேவர்களை வென்று மூவுலகையும் ஆண்டவன். தம்மை வெலவார் யாருமிலரென்று இறுமாந்து திரிந்தவன். அவனைக் கொல்வதற்காகவே பிறந்தவன்தான் மலைகளின தலைவனான மயில்வாகனன். அவன் ஆன்மாக்களைத் திருத்தி ஆட் கொள்ளும் பொருட்டு உலகங்களைப் படைத்த உமாதேவியாரின திருமுலை யினின்றும் பெருகும் ஞானப்பாலைப் பருகியவன. அது போதாதெனறு சரவணப்பொய்கையிலுள்ள தாமரை மலராகிய தொட்டிலில் கிடந்தவாறு கார்த்திகைப் பெண்களாகிய ஆறு தாய்மார்களின் திருமுலைப்பாலையும் உண்ண விரும்பி அழுதவன். அவன் அப்படி அழுதபோது கடலும் அழுத தாம். கிரௌஞ்ச மலையும் அழுத தாம். அவ்வளவு ஏன்? சூரபன் மனும் அழுதானும். பாலகனு'ய் பாலுக்கழும் பிள்ளையே வளர்ந்து குமரனகிக் கடலைக்கலக்கி, கிரௌஞ்ச மலையைப் பிளந்து, சூரபன்மனை இரு கூறுக்கப் போகிறனல்லவா! எனவே தான் அவையும் கூட தம் அழிவை நினைத்து சிவகுமரனேடு சேர்ந்து அழு தனவாம். கடல் கன்மத்தையும், கிரௌஞ்சமலை மாயையும், சூரபன் மன ஆணவத்தையும் குறிப்பதாகக் கூறுவர். முருகனின் பிறப்பு அவற்றை யொழிப்பதற்கே எடுத்த தாகும். இக்கருத்துக்களடங்கிய அருணகிரியாரின பாடல் இதோ:

"திருந்தப் புவனங்க ளீன்றபொற்
பாவை திருமுலைப்பால்
அருந்திச சரவணப் பூந்தொட்டி
லேறி யறுவர் கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ
விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்
றோதுங் குவலயமே"

(கந்தரலங்காரம் 5ஆம் பாடல்)

குன்றுதோறாடும் குமரன் நம் முன் னல் தோனறினல் போதும். நாம் நல்ல நாள் பார்க்கத் தேவையில்லை. முன்னர் செய்த வினை என்ன செய் யுமோ எனறு அஞ்ச வேண்டியதில்லை. நவகிரகங்கள் நலிவுறுத்துமோ வெனறு பயப்படத் தேவையில்லை. உயிரைப் பறிகக வருமயமன் எனன செய்வாரோவெனறு மிரள வேண்டிய தில்லை. எடுத்த காரியங்கள் அனைத் திலும் வெற்றியடையலாம். எடுத்த

பிறவிக்காலம் முடிந்ததும் முருகனை அடையலாம். இவ்வுண்மையறிந்த அருணகிரியாரின் அரிய பாடல் கீழே தரப்பட்டுள்ளது :

''நாளென் செயும்வினை தானென்
செயுமெனை நாடி வந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென்
செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுஞ்
சண்முகமுந்
தோளும் கடம்பு மெனக்குமுன்
னேவந்து தோன்றிடினே''

முருகன் திருமாலின் மருமகன். சிற்சபையில் நடம் புரியும் சிவனுககு மகன். தேவர்களுக்கு மேலான தேவதேவன். கெண்டை மீன்கள் நிறைந்த வயல்களும், சோலைகளும் நிறைந்த திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள செங்கோடன். அருணகிரியாருக்குள்ள கவலையெல்லாம் கந்த வேலனக் கண்டு தொழ தமககுள்ள இரண்டு கண்கள் போதவில்லையே என்பதுதான். அவற்றுக்குப் பதிலாக நான்காயிரம் கண்களைப் பிரமன் தமக்களித்திருந்தால் ஒருவேளை முருகனை முடியக் கண்டு மகிழக்கூடும் என்கிறார். 'சண்முகனைத் தொழ இரு கண்கள் போதா. எண்ணற்ற கண்கள் தேவை' யென்று நான்முகனுக்குத் தெரியாமல் போனதேன்? பிரம்மாவின் மீது சற்ற கோபம் கூட வருகிறது அருணகிரிநாதருக்கு. பாடலைப் பாருங்கள், அவருக்கு ஆறுமுகனின் அழகைக் கண்டு களிப்பதிலுள்ள ஆர்வம் புரியும்.

'' மாலோன் மருகனை மனறுடி
மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச்
சென்று கண்டு தொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த
நான் முகனே''

(கந்தரலங்காரம் 90-வது பாடல்)

தம் கண்களுக்குத் துணையாகிக் காக்கும் திறத்தன, முருகப் பெருமானின் மென்மையான மலர் போன்ற திருவடிகள். நாம் பேசும்வார்த்தையின் வாய்மை தவறுதிருக்க துணையாவது குகப்பெருமானின் திருப்பெயர். நாம் இதுவரை செய்திருக்கக கூடிய பழி பாவங்களைப் போக்கத துணை செய்வன அவனுடைய பன்னிரண்டு தோள்கள். நாம் தனியாக பயத தைத் தரக்கூடிய வழியில் செல்லும போது துணை புரிவன திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமானின் வடிவேலும், மயில வாகனமும் ஆகும. இக்கருத்துக்களடங்கிய அழகிய பாடல் வருமாறு :

'' விழிக்குத் துணைதிரு மென்மலர்ப
பாதங்கள் மெய்ம்மைகுன்ற
மொழிக்குத் துணைமுரு காவெனு
நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு
தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்
செங்கோடன் மயூரமுமே.''

(கந்தரலஙகாரம 70வது பாடல்)

முருகன் சிவந்த திருமேனியைக் கொண்டவன்; உயிர்கள் உய்வதற்கான பற்றுக்கோடானவன; திருச்செங்கோடு என்ற மலையில் வீற்றிருப்பவன்; செவ்விய ஒளிவீசும் வேலாயுதத்தைத் தாங்கிய அரசர்க்கரசன்; செந்தமிழில் ஓம் என்னும் மந்திரத்திற்குப் பொருள் சொன்னவன்? விளங்குகின்ற வள்ளியின் கணவன்; நறுமணமிக்க கடப்பமாலையை அணிந்திருப்பவன்! மேகத்தைக் கண்டவளவில மகிழும் மயிலினை வாகனமாகக் கொணடவன்; அத்தகையவனைச் சாகின்றவரைக்கும் மறவாதவர்களுககுத் தாழ்வானது வாழ்வில் வருவதிலலை. உயர்நிலையாகிய அவன திருவடிகளைச் சென்றடைவர் என்பது கருத்து. இப்பொருள பொதிந்த கநதரலங்காரத்தின் 72வது பாடலைக் கீழே காணலாம்:

'' சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்போல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா தவர்க்
கொரு தாழ்வில்லையே''

அருணகிரிநாதர் முருகனின் பல திருத்தலங்களுக்கும சென்று அவ்வத் தலங்களுக்கென தனியே திருப்புகழ் பாடியவர். அவ்வாறே கநதரலங் காரததிலும் திருச்செந்தூர், திருச செங்கோடு, பழநி, திருததணிகை முதலிய இடஙகளைப் பற்றிய பாடல் களை நாம் காணலாம். இவ்வாறு திருத் தல மகிமை பாடுவதெல்லாம் அடியார்த் திருக்கூட்டம தமக்கு அணிமைத்தாகியதும, தம்மால் சென்று வரக்கூடியதுமாகிய இடங்களுக்குச் சென்று முருகனை வழிபட்டுய்யவும் வழிவகுக்கக் காணலாம.

அருணகிரிநாதரின் தமிழ்ப் பற்று கநதரலங்காரத்தில் தெற்றென விளங்கக் காணலாம். 52ஆம் பாடலில், 'செந்தமிழாற் பகரார்வம் ஈ'' என்று வேண்டுபவர். 72ஆம் பாடலில், 'செந்தமிழ் நூல் விரித்தோன்' என்று முருகனைக் குறிப்பிடுவதோடு 22ஆம் பாடலில், ''முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப் போன்'' என்று போற்றுகிறர். முருகனைத் திட்டுவதாய் இருந்தாலும் தமிழில் திட்டினுல் அவ்வாறு இகழ்பவர்களையும் நன்றாக வாழவைப்பாளும் அவன. அப்படியானுல் நற்றமிழால் அவனது நல்ல திருப்புகழைப் பாடுவார் அடையலாகும் பேறு பற்றி சொல்லவும் வேண்டுமோ? இங்கே வெளிப்படும் அருணகிரியாரின தமிழ்ப்பற்றுக்கும் ஈடு கூறலாகுமோ?

கந்தரலங்காரத்தில் காப்புச் செய்யுளோடு சேர்த்து நூற்றியொரு பாடல்கள் உள்ளன. அவற்றுக்குப் பின்னுல் நூற்பயன் நுவல்வனவாய்த் தனியாக ஆறு பாடல்கள சேர்க்கப் பட்டுள்ளன. நூல் முழுவதுமே நாம் அவசியம் படித்தறிய வேண்டியதாகும்; முருகனைப் பாடித் துதிக்க பெரிதும் உதவுவதாகும்; வாழ் வாங்கு வாழ்ந்து வடிவேலவன் பொன்னுர் திருவடிகளைச் சென்றடைய வழி செய்வதாகும். எனவே நாளும் கந்தரலங்காரத்தினைப் பாடிப் பரவி உயர்நிலையடைவோமாக. ★

# கொங்குப் பிராட்டியார்

கொங்குப பிராட்டியாா :

நமது எணணப் பறவை உடையவரின் காலத்திற்குச் சிறகடித்துப் பறநது செல்கிறது. இராமானுசர் பிறநத ஆணடு கி.பி. 1017. இராமானுசர் கொங்கு நாட்டிறகு வருகை தந்த ஆணடு கி. பி. 1070 என்று ஊகிக்கலாம். இதை வைததுப் பாாத்தால் அப்போது அவருடைய வயது 53 ஆக இருநதிருக்கக்கூடும்.

வேட்டுவர்களால் தேனும் தினை மாவும தந்து உபசரிக்கப்பட்ட இராமானுசரை ஆதரித்த அந்தணர் நல்லான். இவர் வேடர் ஒருவரது ஈமச சடங்கில் கலநது கொண்டதற்காக அந்தணர் குலத்திலிருந்து ஒதுக்கி வைக்கபபட்டிருநதார்.

செருக்கலை அந்தணச் சேருக்கு வேடர்கள் வழிகாட்ட இராமானுசரும் சீடர்களும் செனறனர். அந்த அநதணச சேரியில் வாழ்ந்து வந்த அம்மையார்தான் கொங்குப் பிராட்டியார்.

வந்திருப்பவர்கள் அனைவரும் வைணவ அடியார்கள் என்பதை அறிந்து கொண்ட கொங்குப் பிராட்டியார் அனைவரையும் வணங்கி, "அனைவருக்கும் தளிகை செய்கிறேன். திருவரங்கத்தில் உடையவரிடம பஞ்ச சமஸ்காரம் பெற்றுள்ளேன். திருவமுது செய்தருள வேண்டும்", என்று வேண்டினர்.

கொங்குப் பிராட்டியார் ஏற்கனவே எம்பெருமானுராகிய இராமானுஜரை திருவரங்கத்தில் நேரில் கண்டு தவயமும் (ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே.

திரு. பா. அன்பரசு,
சேலம்.

ஸ்ரீமதே நாராயணாய நம: இதுவே மநதிர இரத்தினம் எனப்படும்), பஞ்ச சம்ஸ்காரமும் (பஞ்ச சம்ஸ்காரம் என்பது ஆச்சாரியாா சீடரை ஏற்கும் போது அவருக்குச் செய்விக்கும் வைதிகச சடங்குகள்) பெற்றிருப்பினும் அவர் காசாயமும், திரிதண்டமும் இனறி வெள்ளையாடையில் அப்போது இருநததால் அம்மையாரால அடையாளம கணடு கொள்ள இயலவில்லை.

அடியார்களுள் ஒருவர், 'அம்மா! உடையவரிடம் எப்போது எங்கே பஞ்ச சம்ஸகாரம் பெற்றுக் கொண்டாய்?' எனறு கேட்டார். கொங்குப் பிராட்டியார், 'எங்கள் கொங்கு நாட்டில் பன்னிரண்டு ஆண்டு மழையில்லாமல் அதனால் பெரும் பஞ்சம் ஏற்பட்டது. நானும் எனது கண



ஸ்ரீ வரதராஜப பெருமாள் கோயில்-செருக்கலைப் புதுப்பாளையம்.

வரும் திருவரங்கம் சென்று சில காலம் வாழ்ந்து வந்தோம். அப்போது எம்பெருமானர் அன்றுடம் பிட்சைக்கு வருவதை நான் தங்கியிருந்த வீட்டின் மேல் மாடியில் இருந்து கண்டேன். இராமானுசரிடம சென்று வணங்கினேன். அவர் தவயத்தை எனக்கு உபதேசம செய்தார்' என்று கூறினர்.

வெள்ளையாடையில இருந்த உடையவரும பிற அடியார்களும கொங்குப் பிராட்டியார் கூறியதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருநதனர்.

கொங்கு நாடு செழிபபுற்றதைக் கூறி அம்மையார் ஊா திரும்ப இருப்பதையும், மந்திரத்தை மறந்துவிட்டதையும் மீண்டும் அதனை அருளிச் செய்ய வேணடுமென்று அவர் கேட்டுக் கொண்டபடி மநதிரத்தை உபதேசித்ததும், அம்மையார் வேண்டுகோளுக்கிணங்க அன்றுடம் பூசை செய்ய, எம்பெருமானரது பாதுகைகளைக் கேட்க அவற்றை வழங்கியருளியதும் எம்பெருமானருக்கு நினைவு வந்தன.

இராமானுசர் குறுக்கிட்டு,'அம்மா! அவர் உபதேசித்த மந்திரத்தைக் கூறு', என்று கேட்க அவருடைய காதில் மட்டும் விழுமாறு மந்திரத்தை மெதுவாகக் கூறினர் கொங்குப் பிராட்டி. மந்திரந்தைச் சொல்லாவிட்டால் வைணவப் பிராமணர்கள் தமது வீட்டில் திருவமுது செய்ய மாட்டார்களே என்று அஞ்சினர் அம்மையார்.

"உனக்கு மந்திர உபதேசம் செய்த எவரேனும் எங்கள் கூட்டத்தில் இருக்கிறர்களா என்று அடையாளம் காட்ட முடியுமா?" என்று அமமையாரைப் பார்தது வினவினர் ஒரு வைணவ அடியார்.

கொங்குப் பிராட்டியார் வைணவ அடியார்கள் அனைவரையும் நன்கு உற்று நோக்கிய பிறகு வெள்ளையாடையில் இருக்கும் எம்பெருமானரைச சுட்டிக் காட்டி, "இவர் தான் எனக்கு உபதேசம் செய்து பாதுகைகளையும் கொடுத்தார். ஆனல் இந்த சுவாமிகள அப்போது காசாய ஆடை, திரிதணடம் ஆகியவற்றுடன் இருந்தார். தற்போது வெள்ளையாடையுடன இருக்கிறர்களே எனறுதான யோசிக்கிறேன்" என்று மிகவும் பணிவாகக் கூறினர்.

பாதுகைகளை எடுததுவரப் பணித்தார்கள் அடியார்கள். அம்மையார் இல்லத்தினுள் பூசையறையில் வைத்திருநத, எம்பெருமானர் கொடுத்த பாதுகைகளைக் கொண்டுவந்து காட்ட அவை எம்பெருமானருடையதுதான் எனபதை அறிநத பிறகு திருவமுது படைககும்படிக கூறினர்கள்.

கொங்குப்பிராட்டியார் திருவமுது சமைத்துப் பூசை அறையில் வைத்திருநத எப்பெருமானா பாதுகைகளுக்கு ஆராதனை செய்து பரிமாற ஆயத்தமானா. இதை ஓர் அடியாரின் மூலம் அறிநத எம்பெருமானர் தமது பாதுகைகளுக்குப் படைக்கப்பட்ட திருவமுதினைத் தாம் உண்பது சரியல்ல என்றுகூறி மற்ற அடியாாகளுக்குப் பரிமாறச சொன்னர். அவர் பழம் பால் மட்டும் அருந்திக் கண்ணுறஙகினர்.

இத்தனை நிகழ்சசிகள் நடக்கும் போது கொங்குப் பிராட்டியாரின் கணவர் அரங்கதாசர் வெளியில் சென்றிருந்தார். இல்லம் வந்ததும் நடந்த அனைத்தையும் அறிந்தார். எமபெருமானரிடம் வந்து தாமும் பஞச சம்ஸ்காரம் பெற்றுர் எம்பெருமானர் மனச்சோர்வு நீங்கி அந்த ஓதுக்குப் புறமான சிற்றூரில், கொங்குப் பிராட்டியாரின் விருந்தினராகத் தமது அடியார்களுடன் சில நாட்கள் தங்கி இருந்தார். காசாயம, திரிதண்டம் இவற்றைப் புதிதாக ஆயத்தம செய்து கொண்டு அங்கிருந்து புறப்பட்டு பவானி (பூவாணி) சத்திய மங்கலம், திம்பம், கொள்ளே காலம் வழியாக ஒய்சான மன்னன் ஆட்சிக்குள் அடங்கிய மைசூருக்குப் பயணம் ஆனர் எம்பெருமானர்.

விசய மங்கலம் கார்மேகக் கவிரர்யர் (ஜினேந்திரன்) கொஙகு மணடல சதகம என்னும் தமது நூலில்,

"சிவனே பரமபிறிது இல்லையெனு
தான சிரம்துணிக்க
உவநதனன் சோழன் எனமாறு
வேடமாய் ஓடிவந்து
கவன்றிடி ராமானுஜனதனைத் தேற்றி
யும் காததளித்த
மவனகைக் கொங்கு பிராடடிய
ருஙகொஙகு மணடலமே"

(கொ. ம. ச. 68)

என்னும் பாடலில் கொங்குப்பிராட்டியாரைப் பற்றிக் கூறியுள்ளார். கொங்கு மண்டல சதகம் 225 ஆணடுகளுக்கு முன்பு எழுதப்பட்டது. இதறகு உரை எழுதியவர் திருச்செங்கோடு தி. அ. முத்துசாமிக கோனர் அவர்கள். இப்பாடலின் பொருள்:

சிவபெருமானே பரம் (துரிய மூாத்தி), வேறு இல்லை எனக் கையெழுத்துப் போடாவிடின சோழன் இராமானுசரைக் கொனறு விடுவான் என்று சீடர்கள் பயந்து, அவரை கொங்கு நாட்டுக்கு அழைத்து வர, அங்கு அவருக்கும், அவர் சீடர்களுக்கும் உணவு, உடை தந்து ஆதரவு ஈந்த கொங்குப் பிராட்டியாா வாழ்ந்ததும கொங்கு மணடலம் என்பதாகும்.

கொங்குப் பிராட்டியாரைப் பறறிய தனியன்கள்:

'யா ரங்க ஸ்தல வாசிநம்
யதிபதிம மாவி தரா யாக தம
தருத்யை ரபி வந்திதம ஸவிநயம
த்ருஷட் வா பரண மோத்யதாம'

ஸ்ரீராமாநுஜ பாதுகார்ச்சன பராம
ஸ்வீயம நருஸிமஹ நுதாம்
தாம் தேவீம் பஜதாம் அபீஷட பலதாம
கொங்கில பிராட்டிம் பஜே.

யதிந்திர பாதாம்புஜ நிஷ்ட்ட சித்தாம்
அசேஷ பக்தார்த்துரத ததவ
போதாம்

............... . ........ ....
கொங்கு லக்ஷமீம்சரணம் ப்ரபதயே.

இநதத் தனியனகளின பொருள

'ஸ்ரீரஙகத்தில பாஷியம செய தருளிய உடையவருடைய தளிர் போன்ற இரண்டு திருவடிகளை அடைந்து அவா பிசசை கொள்ளத் தக்க வீட்டில் இருநது, தான பிறந்த கொங்கு தேசத்திற்குச செலல விரும்பி அவருடைய பாதுகைகளைப் பெற்ற இலட்சமி இனனும பெயரு டைய அமமையாரைத் துதிக்கிறேன்.'

'உடையவருடைய திருவடியின அறிகுறியாகிய பாதுகைகளைப பூசிப் பவரும், அடிக்கடி உத்தமமான மந திரததை ஜெபிப்பவரும், தமிழ் வேதஙகளின தததுவ ஞானச சுடரு மான கொஙகுப் பிராட்டியாரைத தஞ்சம அடைகின்றேன'.

'உடையவருடைய திருவடி சம் பநதமுள்ள மனத்தராய்ப் பல சீடர் கள கேட்கும தததுவஙகளைத் தெரி விக்க வல்லவராய், இலட்சுமி நர சிமம மூர்த்தியின திருவடிக் கமலத தில வீழும வணடு போலும் நோமை மிகுநதவராய உளள கொஙகுப் பிராட்டியாரை நான தஞசமடை கிறேன.'

'பிரபநநாம்ருதம' என்னும் நூல கொஙகுப் பிராட்டியாரைப் பற்றிய செய்திகளைத் தருகினறது. இநநூல கொஙகுப் பிராட்டியாரின பெயரை 'சேலாஞசலாமபாள' என்றும, இவரு டைய கணவா கொங்கில் அணணன் எனறும, எம்பெருமானார் நியமித்த 74 வைணவ சிஙகாசனாதிபதிகளில் ஒருவர் எனறும கூறுகிறது.

**சபரியும் பரதனும கொஙகுப் பிராட்டி யாரும் :**

இராமகாதையில சபரி இராமனுக் காகக் காததுக கொணடிருநதாள. ஆனால் கொங்குப் பிராட்டியாருக்கோ சறறும் எதிர்பாராத வகையில் எம பெருமானார் திருவரஙகததில காட்சி தந்து மந்திர இரத்தினத்தை உப தேசம் செய்து பஞ்ச சம்ஸ்காரம் செய்து வைத்தார். பிராட்டியார் வாழ்நத கொங்கு நாட்டிறகும் வருகை தநது அவா இல்லத்தில் சில நாளகள தங்கி திருவமுதும் உண்டு சென்றுள்ளார்.

கானகம் ஏகிய இராமனை சரண் புகுந்து அவனது பாதுகைகளைப் பெறறுத தனது தலைமீது சுமந்து வநது அவற்றை அரியணையில் வைதது நநதிக கிராமத்தில் அரசாணடான் பரதன். இதே போல திருவரங் கதது வீதியில் பிச்சை ஏற்று வநது கொணடிருந்த இராமானுசரை வழி மறித்து அவர் அன்புடன் ஈநத அவரது பாதுகைகளைப் பெற்றுக் கொங்கு நாடு மீணடு, அவற்றைப் பூசித்து வநதார் கொங்குப் பிராட்டி யார்

எமபெருமானார் பாதமபட்ட மணணைத் தரிசிக்க செருக்கலைக்கு சேலததிலிருநது பயணம் போக லாமா? தெற்கு நோக்கி ஓடி வரும் திருமணிமுத்தாறு காவிரி ஆற்றில் கலக்கிறது. இந்த ஆறு இனறு சாக் கடை ஆகிவிட்டது. இவ்வாற்றின மேறகுக கரையில் செருக்கலையும், கிழககுக கரையில செருக்கலைப புதுப் பாளையமும் உள்ளன. இவவூர்கள இனறைய சேலம் மாவட்டம் நாமக கல் வட்டத்திலுள்ள பரமத்தி ஊராட்சி ஒன்றியத்தில உள்ளன. சேலததிலிருநது இராசிபுரம வேலக் கவுணடனபட்டி ஆகிய ஊர்களின வழியாகவும், நாமக்கல்லில் இருந்து வேலக கவுணடன்பட்டி வழியாகவும் எமபெருமானார வாசம செயத செருக்கலையை அடையலாம். இவ வூரின கிழககில இலத்துவாடி என் னும சிறறூர் உளளது. இந்த மூன்று ஊர்களும இராமானுசரின் திருவடி பட்ட பேற்றினைப் பெற்றவையாகும்.

திருச்சிராப்பள்ளியிலிருந்து செருக் கலைககுச் செல்ல வேணடுமென்றால நாமககலலில் இருந்து பேருந்து வசதி யுணடு. மிகச் சிறிய ஊர். ஊரில் ஒரு தொடக்கப் உயர்நிலைப் பள்ளி யும் விரல்விட்டு எண்ணிவிடக் கூடிய சில வீடுகளும் கடைகளும் உள்ளன. பேருந்துப் பாதையில் மக்கள் நட மாட்டததைப் பார்ப்பது அபூர்வம்.

"இந்த ஊரில் அக்ரகாரம ஏதும் இருககிறதா?" செருக்கலையைச் சேர்ந்த ஆசிரியர் திரு. கருப்பண்ணன் அவர்களைக் கேட்கிறோம். காரணம் எம்பெருமானார் தங்கிய இடம அக்ர காரம் எனறு குருபரம்பரையும் பிர பநநாம்ருதமும் கூறுகின்றனவே. "செருக்கலை பஸ் ஸ்டாப்பின் மேற்குப் பக்கம் இருக்கும் பகுதி தான் அக்ரகாரம். இப்போது பிராம் மணக் குடுமபம ஒன்றுகூடக் கிடை யாது. பெரியவர்கள் இங்கு அக்ர காரம் இருநததாகக் கூறுவார்கள்", என்று தெரிவிக்கிறார் ஆசிரியா கருப்பணணன.

"திருவரங்கத்திலிருந்து மைசூருக் குப் பயணம் செய்த போது இராமா னுசரும் அவருடைய அடியார்களும் இந்த ஊரில் தங்கியதாக அறி கிறோம். அதைப் பற்றிய செவிவழிச செய்திகள் (கா்ண பரம்பரைக் கதை கள்) எதுவும இவ்வூர் மக்கள் அறிந் திருக்கிறார்களா?" என்று கருப்பண் ணன் ஆசிரியரைக் கேட்கின்றோம்.

"யாருக்கும் அதைப் பற்றித் தெரி யாது"

"இராமானுசா வழிபாடு செய்த தாக இவ்வூரில் ஒரு பெருமாள கோயில் இருநததாகப் படிக்கின் றோம். அது எங்கே உளளது?"

"இநத ஊரில் இருப்பது ஒரே ஒரு பெருமாள் கோயிலதான். வரத ராசப பெருமாள கோயில் என்பார் கள். ஆரமபப பளளிக்குப் பின்புறம் அதோ தெரிகிறதே அதுதான", என்று சுட்டிக் காட்டிவிட்டுச சென்று விடுகிறார் ஆசிரியர்.

பழஙகாலக் கோயில் எனறு நாம் கல் கட்டடம், கோபுரம், விமானம் இவற்றைக் கற்பனை செயது கொண்

டால் அது நம் தவறுதான். வரத ராசப் பெருமாள் கோயிலுக்கு முன்பு ஒரு வெற்றிடம புதர்களுடன் உள்ளது. கோயிலின முன்புறம் செதுக கப்பட்ட கல் விளக்குக கமபம சங்கு சக்கரம, கருடன், அனுமன் ஆகியவர் களின் படைப்புச் செதுக்குச சிறபங களுடன காணப்படுகின்றது. பலி பீடம் கேட்பாரில்லாமல் வறண்டு போன எண்ணெய்ப் பிசுக்குடன தரையில் விழுநது கிடககின்றது. காலத்தால் இவை பழமையானவை.

வரதராஜப் பெருமாள் கோயில் செங்கற்களால் கட்டப்பட்டு சுண ணும்புக் காரை பூசப்பட்டு நாட்டு ஓடு வேயப்பட்ட இரு தாக்குகளைக் கொண்டது. இரு தாக்குகளுக்கும் இடையில் உள்ள இடைக்கட்டு தார்சு போடபபட்டது என்றாலும் பெரும் பாலும் சிதிலம் அடைநது விட்டது. மூலவர் புற்று வடிவம். ஐநது அடி உயரமுள்ளது புற்று. புற்றுககு முன்பு செதுக்கப்படாத சிலை வடிவம். வாயிற் காப்போர் என்று நினைக்கும் படி மூலத்தானத்தின் இரு புறமும் ஓர் அடி உயரமுள்ள செதுக்கப் படாத சிலை வடிவங்கள் காணப்படு கின்றன. வானம்தான் கூரை.

"இந்தக் கோயிலுக்கு விழா எப் போது செய்கிறீர்கள்?" பள்ளிக்குச் சத்துணவு சமைக்கும் பெண்ணிடம் கேட்கிறோம்.

"முன்பெல்லாம் புரட்டாசி மாதம் இந்தக் கோயிலுககுப பண்டிகை செய்வாங்க. இப்போது கார்த்திகை தீபம அன்றைககு விளக்கு ஏற்றி வைபபதுடன சரி ஒவ்வொரு சனிக கிழமையும் வெளியூரிலிருநது அய்யா ஒருவா வநது பூசை போட்டுவிட்டுச் செல்லுகிறார்."

அதிக மனித நடமாட்டமும், பேருந்துப் போக்குவரத்தின் சல சலப்பும இல்லாது உள்ளது செருக் கலை புதுப்பாளையம் கிராமம. இராமானுசா அப்பகுதிககு வருகை தநத போது அதாவது 897 ஆணடு களுக்கு முன்பு அப்பகுதி எவவளவு ஒதுக்குப் புறமாகவும் காடாகவும் இருந்திருககும என்பதை வாசகர்கள கற்பனை செய்து கொள்ளலாம்.

வரதராசப் பெருமாள கோயி லுககு எதிரில கிழககுப் பாாத்த நிலை யில் காளியமமன கோயிலும் எதிரில வேலைபபாடமைந்த மண குதிரைச சிற்பங்கள் நானகும உள்ளன.

செருக்களைப் புதுப்பாளையததி லிருநது திருமணி முத்தாற்றினைக கடககிறோம். செருக்கலை எனனும சிற்றூரை அடைவதற்கு முன்பு சாலை யின் வலது பக்கம ஊஞைச மரககாடு ஒன்று உளளது. அங்கு பொனனுசசி யம்மன கோயில கல் கட்டடத்துடன காணப்படுகின்றது. பழமையானது. இராமானுசா காலத்தில் சோழ நாட் டின ஒரு பகுதியை சோழர் குடியில் பிறந்த அகளஙகா என்னும் குறுநிலத் தலைவா ஆட்சி செய்து வந்தார். திரு வரங்கம் பெரிய கோயிலின நிர் வாகததைக கவனிகக அகளஙகரை நியமித்தார் இராமானுசா. அகளங் கரின மெய்க் காபபாளராக இருந் தவர் உறங்காவில்லி. இவருக்குத் தனுாதாசன் என்ற பெயர் உண்டு. இவருடைய மனைவி பொன்னுச்சி. அழகே உருவானவள. கணவன் மனைவி இருவரும் உயிருககு உயிராக அன்பு செலுத்தினர். தனது கணவா மறைந்தபோது அவர்மீது கொணட அன்பில் அவளது உயிரும பிரிந்தது.

பொனனுசசி அம்மன கோயில் ஒன்று செருககலையில உளளது என்று ஏறகனவே குறிப்பிட்டுள்ளோம். செருககலை இலததிவாடி வட்டாரங் களில் பொன்னுசசி என்னும பெயர் பெணகளுக்கு இடும வழககம் உணடு. ஆகவே இந்தப பெண் தெய்வத்தின் பெயரே அகளங்கரின மெய்க்காப் பாளனுக இருந்த உறஙகாவில்லியின் மனைவிககும பெயராக இருந்துள்ளது. இதனை ஆராயநது பார்ததால் அப் பெண கொஙகு நாட்டைச் சேர்நத பெணணாக இருககலாம் எனறு ஊகிக்க இடமுளளது.

அஙகிருநது புறப்பட்டு மீணடும செருககளைப் புதுபபாளையம் பேருநது நிறகுமிடத்திறகு வருகிறோம். இராசி புரம வழியாகச் சேலம புறப்படும பேருநது பிற்பகல் 1-30 மணிக்கு வருவதாக ஊரார் கூறுகிறார்கள்.

கொங்குப பிராட்டியாருக்குப பிறகு எம்பெருமானார் பாதுகைகள் என்னவாயிற்றோ! அலலது அவை பூசிக்கப்பட்ட இடமதான ஒரு கோயிலாகியுள்ளதோ? யாா அறி வாா? எம்பெருமானாா திருநகரம புகுநது (மறைந்து) இன்று 875 ஆண்டுகள ஆகிவிட்டனவே.

வரலாற்றுக் கால நினைவுகள் நமது மனத்திரையில் அலைமோதிக கொண் டிருகக இராசிபுரம செலலும பேருநது வநது நிறகிறது. அதில ஏறிச சேலததிற்குப் பயணம ஆகி றோம். பேருந்து ஓடிக் கொணடிருக் கிறது. இராமானுசா நூறறந்தாதி யின சில பாடல்களை நமது உதடுகள முணுமுணுக்கின்றன.

"படிகொண்ட கீர்த்தி இராமாயண
மெனனும பததிவெள்ளம்
குடிகொண்ட கோயில் இராமானுசன
குணம கூறும அனபர்
அடிகொணட மாமலாதாள கலந்து
உளளம் கனியும நல்லோர்
அடிகண்டு கொணடு உகந்து எனனை
யும ஆளவாககு ஆக்கினரே"(37)

"பூமனனும்மாது பொருநதிய மார்மன
புகழமலிநத
பாமனனும மாறனஅடிபணிநது
உய்நதவன பல்கலையோர்
தாம்மனன வந்த இராமானுசன
சரணர விந்தம
நாம்மனனி வாழ நெஞ்சே! சொல்லு
வோம அவன் நாமஙகளே" (க)

卐

# இது அவன் விரதம்

கருணைக் கடலாம வைகுந்த நாதனை 'அச்சுதன்' என்று சிறப்பித்தழைப்பர். ஆம், தன்னையண்டினவர்களை ஒருக்காலும் நழுவ விடான. ஆகவே இத்திருநாமம் வெகு பொருத்தமாகவும் பெருமையூட்டுவதாகவும் அமைந்துள்ளது. அவன தானே, இராமனாய் இப்புவியில் அவதரித்தான். "எவ்வுயிராயினும் 'என்னைக் காப்பாற்று' என்று என்னைச் சரணமடைந்தால் எந்நிலையிலும் அதனைக் காப்பாற்றியே தீருவேன். இது என விரதம்" என்று தன் விரதத்தினை உலகோரறியும்படி கூறினான். தன்ன அவதார கால முழுதும் இதனை நடத்தியும் காட்டினான். பின்ன அவதாரமாகிய கிருஷ்ணாவதாரத்திலும் 'பலனை எதிர் பார்த்துச் செய்யும் அனைத்துத் தர்மங்களையும் விடுத்து என்னையே பற்று நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் காப்பாற்றி மோக்ஷமடையச் செய்கிறேன் சம்சயம் வேண்டா' என்று தேரத் தட்டிலே தேரோட்டியாயமர்ந்து அர்ச்சுனனை முன்னிட்டுக் கொண்டு உலகோருக்கு அறிவுறுத்தினான்.

கற்றறிந்த யோகியாயினும் சூதாட்டத்திலேயுள்ள ஆவல் மிகுதியால் பாண்டவர்களில் மூத்தோனாகிய தருமன செல்வமனைத்தையும், இராஜ்யத்தையும், ஏன், உடன் பிறந்தாரை வரையும் தன் மனைவியையும் கூட பந்தயப் பொருளாக வைத்து ஆடினான். சூதிலே கைதேர்ந்த சகுனியின் முன் நேர்மையாளனின் ஆட்டம் வெற்றி காண இயலவில்லை. வென்ற பொருட்களை உடன தனதாக்கிக் கொள்ள விழைந்த துரியோதனன, 'திரௌபதியை உடன சபைக்கு இட்டு வா' வென்று தம்பியான துச்சாதனனை விரட்டினான். வீட்டிற்கு விலக்கமாயும் ஓர் வஸ்திரமேயணிந்து கொண்டிருக்குமதான், பீஷ்மர் துரோணர் போன்ற பெரியோர்கள் அமர்ந்திருக்கும் சபை நடுவே வருவது சரியில்லையென வாதாடினாள். முரடனான அவன் அவள் சிகை பற்றி அலங்கோலமாக இழுத்து வந்தான சபை நடுவே. அவளை மானபங்கம் செய்ய வேண்டுமென்னும் தீய கருத்தோடு அவள் துகிலையும் உரிய வாரம்பித்தான.

பிள்ளைகள் கொடியவர்களேயாயினும் அவர்கள் மீதுள்ள பாசமானது திருதராஷ்டிரனின் இரக்கச் சிந்தையையும் அழியச் செய்துவிட்டது. ஒருககால கண்ணால கண்டால் இரக்கம் ஏற்படலாம் என்பதற்கும் இடமிலலாது போயிற்று, அவன் பிறவிக் குருடன் ஆகையாலே. ஆக, அவனாலும் இக்கொடுமையை நிறுத்த முடியவில்லை. நீதிமானான பீஷ்மனோ பாட்டன் என்னும் நிலையில் தன் பேரனமார்களாகிய துரியோதனாதியர்களை இக்கொடிய செயலினின்றும் தடுத்திருக்கலாம். 'செஞ்சோற்றுக் கடன்' என்று அவர்களிட்ட சோற்றைத் தின்றது காரணமாக அவரும் வாளாவிருந்தார். நல்லவற்றைச் சொல்லித் தீயவற்றைக் களைய வல்ல ஆசாரியனான துரோணரும தன சீடர்களான கௌரவர்களைத் தடுத்திருக்கலாம். ஆசாரிய இலக்ஷணத்திற்கு மாசு கற்பிக்கும் வண்ணம அவரும் மௌனியாகக் கிடந்தார். 'கொடை வள்ளல்' எனப் போற்றப் பெறும் கர்ணனோ, 'உப்பிட்ட வரை உள்ளளவும் நினை' என்னும் முதுரைக்கு ஆவப்பொருள் கொள்ளுமாறு அவர்களிட்ட உப்பும் சோறும் உண்டது காரணமாக இவ்விழி செயலைப் பார்த்துக் கொண்டிருந்தான். நேர்மையும் வல்லமையும் ஒருங்கே சேர்ந்த பாண்டவர்களும், 'தாங்கள் அடிமைகளானோம். அடிமை தன்னிச்சையாய் காரியம் புரிந்திடலாகாது. அதுவும் அடிமை கொண்டுள்ள எஜமானனுக்கு விரோதமாய் ஒன்றும் செய்திடலாகாது' என்று ஓர் நீதியைக் கருத்திற் கொண்டு கைகட்டி வாய்மூடி மௌனியாகத் திகழ்ந்தனர். முரடர்களின் மத்தியிலே ஓர் அபலைக்கேற்படும் இக்கொடுமையைத் தடுப்பதில் இந்நீதியைக் கொள்ளலாகாது என்பதனையும் மறந்தனர். தன்னைத் தானே காத்துக் கொள்ள முடியும் என்னும் அவள் முயற்சியும் தோல்வியே கண்டது.

இந்நிலையில் வசிஷ்ட மாமுனிவன, 'ஆபத்துக் காலங்களிலே இம்மந்திரத்தைச் சொல்லி அவனைச் சரணமடை. அவன் உன்னைக் காப்பாற்றுவான்' என்று சொல்லி வைத்தது இவள நினைவிற்கு வந்தது. 'சங்கு சக்கர கதாபாணே துவாரகா நிலயாச்யுத கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம சரணாகதாம்' என்பதே அம்மந்திரமாம. 'சங்கு சக்கரம கதை ஆகிய திவ்யாயுதங்களைக் கையில் ஏந்திய வனே? துவாரகையில் நித்திய வாசம புரியும அச்சுதனே! கோவிந்தா! செந்தாமரைக் கண்ணா! உன்னைச் சரணமடைந்தேன. என்னைக் காப்பாற்று' என்று வாய்விட்டரற்றிக் கண்ணனைச் சரணமடைந்தாள. 'பிராட்டி ஸ்வ சக்தியை விட்டாள்; திரௌபதி லஜ்ஜையை விட்டாள்' என்பது திருவசன பூடண சூத்திரம. தூதனாய் வந்த அனுமனை அரக்கர்கள் கட்டிப்பிடித்து வாலிலே எண்ணெய்த்

திரு. வி இராகவன்,
பளளத்தூர்.

துணியைச் சுற்றித் தீயையும் வைத்தனர் இதனையறிந்து 'அக்நியே! உன் உஷ்ண சகதியை விடுத்து அநுமனுக்குக் குளிர்ந்திருப்பாயாக' என்று சீதாப்பிராட்டியின சொற்கேட்டு அகநியும குளிரநதிருநதான. தனனைப் பலாதகாரமாகத் தூககி வநத இராவணனையும 'நீ சாமபலாய்ப் போகக் கடவாய்' எனச்சபித்திருந்தால் அவனும சாம்பலாய மணணோடு மண்ணாய்க் கலநதிருபபான். தனனைக காப்பாறற வேணடியவன் தன நாயகனான இராமனே. தன் முயற்சி அவனுககு இழுக்காகுமே யெனனும் தன பாரதந்திரியததால தன ஆறறல் அனைததையும் விட்டாள. நாணமுள்ளவள் நாணத்தையும் விடுத்து உறியும துகில் பற்றியிருநத கரஙகளை சிரமேறகொண்டு மகா விசுவாசத்தோடு கிருஷ்ணனே தன்னைக் காபபாற்ற வலலவன என்று அவனைச் சரணமடைந்தாள். நாயகனான இராமனே தனனைக காததறகுரியவன் என்றிருந்தது பிராட்டிக்குப் பொருத்தமாயிற்று. அப்படியொரு நாயகனற்ற திரௌபதி இப்பெரும் ஆபத்திடையேயும மகா விசுவாசத்துடன் கிருஷ்ணனே காத்தறகுரியவன் எனறு நாணத்தையும் விட்டதன்றோ அரிது!

விரிததக கூநதலோடு கதறும் அவள் நிலை காணச் சகியாத கண்ணனும், "உன்னருகிலேயிருக்கும் கணணனைக கூபபிடாது வெகு தூரமான துவாரகையிலிருக்கும கணணனைக கூப்பிட்டாயே பக்கததேயிருந்தும் கதறும உனககு உதவ முடியாது பெருங கடனாளியானேன" என்று தனனைத தானே நொநது கொணடு துவாரகையினினறும அவள துகிலை வளாப பிததுக கொடுததான் துகிலுரியும துச்சாதனனும் ஒய்நது மூாசசிததுக கீழே விழும் வரை அவள் துகிலும வளாநது சொணடேயிருந்தது! திரௌபதி கண்ணனைச் சரணமடைநதது வீட்டிற்கு விலக்கமான தினம். குளித்து முழுகி உடல் அழுக்கைப் போககிக் கொணடு அவனைச் சரணமடைநதாளில்லை. பாவததைதப் போக்கிக் கொளளப புனித நீராடசசெலலுமவன வழியில ஒரு குட்டையிலே முழுகிச செலவதில்லை. ஆகவே எமபெருமானை, அவன் திருநாமத்தைச் சொலலிச சரணமடையக காலமும், நேரமும நியதியும் தேவையிலலை. உளளத்திலே விசுவாசம என பதொனறிருநதாலே போதும

"பாணடவர்களையும் நிரசிககப் பிராபதமாயிருக்க வைததது-திரௌபதியின் மங்கள சூததிரததுககாக" என்பது திருவசன பூடண சூத்திரம். கௌரவர்களோ கொடுமைமிக்கவர்கள். நீதிமானும் ஆசாரியனும் கொடை வளளலும் இக்கொடுமையைப் பாாத்துக் கொண்டு வாளாவிருந்தனர். குறறவாளிகளான இவர்கள் கொலலபபடத தககவர்களே. பாண்டவாகள் என்ன குறறம புரிநதனா கொலலபபடுவதறகு? எம்பெருமானைச் சரணமடைநத அடியாளுககு நிகழவிருககும பரிபவததை வல்லவனைவன் தடுககாது அங்கு நின்று பாாத்துக் கொணடிருப்பது குற்றம். தங்களால் அதனைத தடுக்க முடியாத வளவில் அவ்விடம விட்டு நகர்ந்து விட வேண்டும். பாணடவர்களும் அதனைத் தடுககும ஆற்றல் உடையவர்களேயாயினும் தடுக்காது பார்த்துக் கொண்டிருந்தனர். தஙகளுக் குறற நண்பனும், நெருங்கிய பந்துவும எல்லாவுமான கணணனையல்லவா இவள சரண மடைந்தாள. நானே இவனைததானே இவாகள பார்க்க வேணடும். அவன முகத்திலே எவ்வாறு விழிப்பது எனபதைக கூடச் சற்றேனும் சிந்தியாது நின்றனர். கணணன் அபிப்ராயத்தாலே இதுவும் குற்றம். ஆக, கொல்லப்படததக்க வாகளான இவர்களைக கொல்லாது விட்டது, அன்று திரௌபதியின விரித்த கூநதலைக காணச் சகியாதவன ஒனறு திருமாஙகலய மற்ற வெறுங் கழுத்தைப் பாாகக எவவாறு சகிததிருப்பான? ஆகவே அவாகளைக கொலலாது விடுததான

பனனிரண்டாணடு கால வனவாசம், ஓராண்டு கால அஞ்ஞாத வாசம் ஆகிய துரியோதனின் கடும் நிபநதனைகளையும பூரணமாயனுபவித்து விட்டுப் பாணடவர்கள் இழநத தங்கள் இராஜ்யத்தைத திருமபக கேட்டனர். இதற்காக முதலில் தருமமறிநதவனுமான தவயோகி சஞ்சயனைத் தூதாகவனுப்பினர். அது பயன தராதவளவில் மீணடும் கணணனையே தூதாகவனுப்பினர். "கழுத்திலே ஓலை கட்டித தூது போனான்" எனறு பெருமையோடு பேசும வண்ணம, 'பறவைகள் மிருகங்கள் ஆகியவற்றின் கழுத்திலே

## தீபமேற்ற உகந்த திசை

**கிழக்கு :** இததிசையில தீபம் ஏற்றி வழிபட, துன்பம் ஒழியும். கிரகத்தின பீடை அகலும.

**மேற்கு :** இததிசையில தீபம ஏற்றி வழிபட கடன தொல்லை, சனிப் பீடை, கிரக தோஷம், பஙகாளிப் பகை இவை நீங்கும.

**வடக்கு :** இத்திசையில தீபம ஏற்ற செல்வமும, மங்களமும திருமணமும் நடைபெறும சுப காரியத தடை, கலவித தடை இவை அனைததும நீஙகும. சர்வ மங்களமும் உணடாகும்.

**தெற்கு :** இத்திசையில தீபம ஏற்றககூடாது.

வேப்பெணணெய, நெய், இலுப்பை எணணெய் இம்மூனறும் கலநது தீபமிடுவதனால செல்வம் உணடாகும. இது குலதெய்வததிற்கும் உகநதது.

திருமதி கமலா மாரியபபன-கோயமபுததூா.

ஓலையைக் கட்டித் தகவல் தெரிவிப்பார் போன்று சொல்லவேண்டியதையும் செய்ய வேண்டியதையும் சொல்லித் தருமன தூதாகவனுப்பினுன் எவ்வாறேனும கௌரவர்களையும் பாண்டவர்களையும் ஒன்று சேர்க்கவே முயன்றுன. "தாயாதிகளான பாண்டவர்கள் உயிரோடிருக்கும் வரை தாஙகள் ஒருககாலும் வாழ்ந்திருக்க முடியாது. நூறு பேர்களாகிய எங்களுககே இப்பரந்த பூமியடங்கலும போதுமானது. அவ்வாறிருகக அவாகளுக்கு எவ்வாறு கொடுகக முடியும. கணணு! அவர்களுக்கு நீயும் தாமமும் உணடு. அதறகுரிய சொாக்கலோகத்தை யாளட்டும. ஓர் அம்பு குத்தும இடமும் தர இயலாது' என வெட்டொன்று துணடிரணடாக வாாததை சொனனுன. இதனுல் போர் ஒன்றே இவ்வநீதியை ஒழிகக வல்லது என்பது நிச்சயமாகிவிட்டது.

கணணனின ஒத்தாசை வேணடி துரியோதனனும் அர்ச்சுனனும் அவன திருமாளிகைக்கு வருகின்றனர். மாயக களளனுகிய கணணனுே யோகுதுயில கொணடு படுககையில கிடககிறுன் சக்கரவாததியும அகங்காரததின சிகரத்திலே இருபபவனுமான துரியோதனன ஓராசனத்திலே கணணன திருமுடிப்பக்கததிலே அமாநதான. அடியானுகிய அர்சசுனனும் கரம் கூபபித் திருவடி ஓரத்திலே பவ்யமாய நினறு கொணடிருந்தான. துயில் கலைநத கண்ணனும முதலில பார்த்ததும அர்ச்சுனனையே. அவன சைகை காட்டப் பினனரே கணணன துரியோதனப பார்த்தான. எம பெருமானின் திருமுடிப பககம 'துரியோதனனைப் பாாசவம்' என பதால் ஆளவந்தார் போனற பூர்வாசாரியாகள் அரங்கப் பெருநகர் கோவிலிலே அழகிய மணவாளனைச் சேவிக்க வருங்காலையில் பெரிய பெருமாள திருமுடிப் பக்கம் எழுநதருளியிருக்க மாட்டார்களாம. வலிமை மிக்கத் தன பெருஞ்சேனையை ஒருவன் கொள்வது; தனனை ஒருவன் கொள்வது என்னும் கண்ணனின முடிவுப்படி பெருஞ்சேனையை துரியோதனனும், தன்னந்தனியனுன கணணனை அாச்சுனனும கொண்டனா. துரியோதனின் இச்செயலையறிந்து பீஷ்மாதிகள் வெகுணடு "கடுகச் சென்று ஆயுதம எடுப்பதில்லை என்று கணணனிடம் உறுதி பெற்று வா" என்று விரட்டினா. அவனும் அவ்வாறே உறுதி பெற்றுக் கொண்டான்.

பொருள் தேடுவதும, இராஜ்யம் சமபாதிப்பதும் உறறுர் உறவினர் களுடன சேர்ந்து வாழும் பொருட்டே. 'ஓா கோல் குத்தும இடமும கொடுகக முடியாது. இவர்கள வாழந்தால தாங்கள் வாழ முடியாது' எனறு சொலலும் அசுரப் பிறவிகளான கௌரவர்களை ஒழிககாவிடில உலக மேயழியும் எனபதால இவாகளை ஒழிககப பாரதப் போா ஒன்றே வழியென அதிலே முனைந்தான.

"நீர்மை இல் நூற்றுவர் வீய ஐவர்கு அருள் செய்து நினறு, பார் மல்கு சேனை அவித்த பரஞ்சுடர்" (திருவாய் 3-5-7) என்றவாறு நூற்றுவரைக் கொன்று தாங்கள் மட்டும் வாழ நினையாத பாண்டவர்கள பக்கல உறுதுணையாக நின்று போரை முடித்தான். இவன் உறுதுணையாக விருநத அருமைதான் என்னே! தேரிலே வீரனமருமிடம் 'ரதி' எனப்படும். ஓட்டுபவன் இருக்குமிடம 'சாரதி' எனப்படும். அர்ச்சுனனை ரதியாகவும தன்னைச் சாரதியாகவும் உலகோர் கண்களுககு இலக்காக்கினுன். 'கையும் உழவு கோலும் பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும் தேருக்குக்கீழே நாறறின திருவடிகளுமாய நிற்கிற ஸாரத்யவேஷத்தை 'மரம்' எனறு காட்டுகிறுன' எனபது முமுக்ஷுப்படி சூர்ணிகை. 'வீற்றிருநது ஏழுலகும் தனிக்கோல் செல்ல' (திருவாய் 4-5-1) எனறவாறு வைகுநதததிலேயே இருந்து

## ஞானம்

எபபடித தீயானது புகையால் மறைக்கப்படுகிறதோ
எப்படிக் கண்ணுடி அழுக்கால் மறைக்கப்படுகிறதோ
எப்படிக் கருவானது கருப்பையினுல் மறைக்கப்படுகிறதோ
அப்படியே காமத்தால் ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது.

பகவான் கிருஷ்ணர்.

## உண்மை

பழைய சமுதாயமானுலும், புதிய சமுதாயமானுலும, உணமை எதற்கும் தலைவணங்காது. சமுதாயம்தான் உணமைக்குத் தலை வணங்க வேண்டும. அல்லது அழிய வேணடும். உணமையை அடிபபடையாகக கொணடுதான சமுதாயங்களை உருவாக்க வேண்டும். சமுதாயத்திற்கு ஏறறுறபோல உணமை தனனை மாற்றி அமைததுக் கொளளக் கூடாது. — சுவாமி விவேகானந்தர்.

## எண்ணம்

நம எண்ணங்களே நம தன்மையை உணடாககியிருக்கின்றன. இருமபின்மேல் சம்மட்டி அடிக்கும் ஒவ்வோர் அடியும அதன் உருவத்தைத் தீர்மானம் செய்வதுபோல் நம் ஒவ்வோர் எண்ணமும் நம தன்மையைத் தீர்மானம செய்கிறது. வார்த்தைகள் அவ்வளவு முக்கியமானவை அல்ல. எண்ணஙகளே அதி முககியமானவை. அவற்றிற்கு ஆழ்ந்த சகதியுணடு.

—சுவாமி விவேகானந்தர்.

கொண்டு ஏழுலகங்களிலும் செங்கோல் நடத்துபவன் இராமனுய்க கண்ணனுய் இப்புவியில் தோன்று கிருன். தசரத சக்கரவர்த்தியின் குமரன் இராமனுய்த் தோனறிய காலத்து ரகுகுலத்திறகுரியதான செங்கோலே யேநதும பெருமை அவ னுககுக கிட்டியது. கணணனுய்த் தேவகி மைநதனுய் "அருளார் திருச் சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும இருளார் வினைகெடச செங்கோல் நடாவுதிர்" (திருவிருத்தம் 33) என்ற வாறு அருள் சுரந்திடும் சக்கரத்தால் விண்ணுலகையும் மணணுலகையும் கொடியோர்களிடமிருநது காத்திடும் அணணல், சங்கு சக்கரங்களோடு தோனறினன். அடியாா இசைக்கு இணங்குபவன தாய் தேவகியின் சொல் கேட்டு சங்கு சக்கரங்களை மறைந்திருககுமாறு செய்தான. க்ஷத்திரியனுகப் பிறநதாலும பிறந்த இரவோடிரவாய் யாதவ குலத்திலே புகுந்து ஒளித்து வளரும்படியாயிற்று. மேலும அக்குலததிற்கேற்ப, தன் னிச்சையாய்த் தெரித்தோடிடும கன்று காலிகளை மேய்ச்சல் தரைக்கு ஒட்டிச் செல்வதிலே இசசையுடைய வனுய்க கையிலே தாய் கொடுத்த கோலே ஏநதினன.

'பாரொனறிப் பாரதஙகை செய்து பாாததற்குத தேரொனறையூர்ந் தாற்கோர் கோல் கொண்டு வா' (பெரியாழ்வார் திரு. 2-6-5) எனற வாறு தாயான யசோதை வருநதிப் பெற்றுத்தநதகோலாகையாலே மிக்க விருப்போடு அக்கோலேக கையிலேநதிக கொணடான. 'தாமத்தை நாட்டிக் காததிடும் பொருட்டு ஒவ்வோர் யுகததிலும் தோன்றுகிறேன' என்று சொனனவனுகையாலே தர்மத்தை நிலே நாட்டும் பொருட்டு இக்கோலேச் செங்கோலாகக் கொண்டான். நிகழவிருக்கும் பாரதப் போரிலே பார்த்தனுககுத்தேரோட்டியாய் வெகுலாவகமாகத் தேரை ஒட்ட வேண்டுமே, அதற்கு முன் அனுபவமாக இக்கோலேயேந்திக் கன்று காலிகளை விரட்டி ஓட்டினன். மேலும் 'யுத்தத்திலே ஆயுதம் எடுப்ப தில்லே' என்னும் தன் வாக்குறுதிக் கேற்ப இனறு இக்கோலேயே குதிரை யோட்டுவதற்கான உழவுகோலாகக் கொணடு அமர்ந்திருக்கிருன்.

நினைததவாறு வலபபுறமும இடப் புறமும திருப்ப, தேவைக கேற்ற வாறு நிறுததவும பாங்காகக கொண டான சிறுவாய்க கயிற்றை மற்ருேர் கையிலே. அழகிய கேசக்கொண டையையுடையவன ஆகையாலே 'கேசவன்' என்று அழைக்கப் பெறு கிருன இன்ருே அக்கேசத்தைக் காததிடும எணணம யாதொனறும் தலைககணியாததினுல சேனை வெள்ளத்தின் நடமாட்டததினுலே ஏற்பட்ட புழுதிப் படலம் அவன் முடியிலே படிநது கிடக்கிறது. வீர சதங்கை களணிநது, அவைகள சப்திகக அழகு நடை நடநது வரும் அவனது வீரக் கழல்கள் நுகததடியின்கீழே தொங்க விட்டுக்கிடக்கின்றன. இவ்வாருன சாரத்திய வேஷத்தை 'என்னை' என்று காட்டித் தன்னைப பற்றச் சொல்லு கிருன்.

மேன்மை விடுததுத் தன நீர்மைக் குணங்கள் பிரகாசிக்கக கணணனுய்த் தோன்றியவன "எனனைப் பறறு உனனைக காபபாறறுகிறேன்" என்று சொல்லுகிருன எனபதனை உணராது தனனை இவன காப்பாறறுவானே? என்னும் ஐயம் அர்ச்சுனன் மனத்தில் நிழலாடுகிறது. 'தனககாகக கொண்ட ஸாரத்ய வேஷத்தை அவனையிட்டுப் பாராதே தனனையிட்டுப் பார்த்து அஞ்சின அசசம தீரததானுன தன மையை "அஹம" என்று காட்டு கிருன்' எனபது முமுக்ஷுப்படி சூர் ணிகை எலலாம வலலவன் தன்னைக் காப்பாற்றும் பொருட்டுத தாழ நினறு இவ்விழி தொழிலே மேற் கொணடது அவன நீர்மைக் குணத் தால் என்று நினையாது மானிடனுன தன் தன்மைக் கேற்றவாறு, தனக் குற்ற நணபன், நெருங்கிய உறவினன ஆகையாலே இவ்இழி தொழிலே ஏற்றுக் கொண்டான் என்றே நினைக் கிருன். ஆகவே அவனது அச்சம் தீர ஸாரதய வேஷததைக் காட்டி 'நான்' காபபாறறுகிறேன் எனறு சொல்லு கிருன

"கொலலாமாக்கோல கொலே செய்து பாரதப் போா
எலலாச சேனேயும இருநிலத்தவித்த வெநதாய்"

(திருவாய் 3-2-3) எனறவாறு குதிரைகளே இங்கு மங்குமாய் விரட்டி ஓட்டுவதறகனறி யுததகளததில் வீரர் களைக கொல்லுவதற்காக இததனைக கொள்ளவில்லே. காணுமிடமெல்லாம அர்ச்சுனன தேர் தெரியும்படியாக லாவகமாகத் தேரை யோட்டிச் செலவதறகு இககோல் தானே தேவைப்பட்டது. 'துவர்க்கமடையத் திரணடதிறே உபய சேனையிலும இங்கே நாலேநது பேரும அங்கே ஒன் றிரண்டு பேருமொழிய முடித்துப் பொகட்டானுயிற்று' என்பது பன்னீ ராயிரப்படி ஈட்டு சூக்தி. ஆம், இங்கு தர்ம புத்திரர்களையும் அஙகு அஸ்வத் தாமா, கிருபாசார்யா, க்ருதவர்மா போனருேர்களைத் தவிர மற்றவர்களை முடிக்கக் காரணமாயிற்று அக்கோல் தானே!

தன மேன்மை பாராது எளிமைக குணம ஒளி வீச இவனுககுத் தூது போனுன். ஆயுதம் எடுப்பதிலலே என்றவன கையிலே உழவுகோல் கொணடு இவனுக்குச் சாரதியாய மர்ந்து, 'யுத்தம செயய மாட்டேன்' எனறு மயங்கிக கிடந்த இவனே யுத்தம செய்யுமபடியாயச் செய் தான. மேலும தேர்ககாலாலே எதிரிகளை நசுக்கிக கொனருன. இத்தனையும செய்தது ஓர் அடியாளின் பொருட்டலலவா?

ஆக, அடியார்கள் நிமித்தம் எவ் இழி தொழிலேயும் ஏறறு அவர்கள அச்சம் தீர்ப்பது அச்சுதனுன அவன் விரதம் ஆயிற்று.

*

(சென்ற இதழ் தொடர்ச்சி)



# பிராட்டியின் பெருமை

மிதிலையிலே இராமனைச் சேவித்த மக்கள் குருடர்கள் அல்லர். கான பதில தோச்சிப பெறற, வாள போனறு ஒளி வீசும் கணகளையுடைய பெணகள். இவர்களாலேயே இராம னின் ஒரு அங்கத்தைத தவிர அவனு டைய திருமேனியின் மறறைப் பாகங களில் கண் வைக்க முடியவில்லையாம்.

"வாள கொணட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார"

முககோணததில இராம பராககிரம சேவை :

மிதிலை மககள இராமனின் வரு கையை எதிா நோககி இருககினறா கள. ஏன ? யானையாகிய இராமன் மிதிலை வருமுன்னே, அவன் கீரத்தி யாகிய மணி ஓசை மிதிலை மக்களின் காதுகளுககு எட்டிவிட்டது.

1. பல காலமாக அட்டகாசம் செயது கொணடு மக்களுக்கு இயம ஞகை உலவிக் கொணடு வந்த தாட கையை, சிறு பிள்ளையான இராமன் வதம் செய்த ஆச்சரியத்தைக் கேள்விப்பட்டார்கள் மக்கள். எனவே 'தாடகை வதம்' செய்த இராமனின் தோள்களைச சேவித்தவர்கள், அந்தத் தோள்களையே கண்டு, அவனுடைய அந்தப பராக்கிரமத்தைப் பாராட் டிக் கொண்டே இருந்தார்களாம்.

எனவே, 'இராமனின் தோள கண டார் தோளே கணடார்.

2. அதைவிடப பெரிய அதிச யத்தை நடததிககாட்டினை இராமன. கௌதம முனிவரின சாபத்தாலே கல்லாகச் சமைநத அகலிகை பலருடைய பரிதாபததிற் குள்ளானள. கௌதமரின சாபத் திற்கு எதிாகணை ஏவ எவரால் முடியும ?

---

திரு. நா. வேணுகோபால் நாயக்கா,
பி.ஏ , பி எல் ,
சென்னை—40.

---

இராமன் தன் திருவடிகளால் அகலி கைககுச சாப விமோசனம் அளித்த தால் அவனுடைய திருவடிகளைச் சேவித்தவர்கள், வேறு ஒரு அவயவத் தையும் பார்த்து ரசிக்க விரும்பாமல், அந்தத் திருவடிகளிலேயே லயித்து விட்டார்களாம். எனவே,

தொடு கழல் கமலம் அன்ன 'தாள கணடார், தாளே கணடார்.'

3. சரி, இவைகளெல்லாம் எங் கேயோ, எபபோதோ நடந்தவைகள் சொல்லக கேளவிதான். பார்த்த திலலையே நேரில. ஆனல் மறறொரு அதிசயத்தை மிதிலை மககள் நேரி லேயே தம்முடைய கண்களாலேயே கணடனர்.

சிவதனுசை எவராவது ஒடிக்கிற தாவது, சீதைக்குக் கல்யாணம் ஆகிற தாவது? எனறு வெறுப்படைந்து, உள்ளம் குனறிககிடந்த நிலைமை யிலே, இராமன சிவதனுசை - பொனமயமான மேருமலை போன்ற அந்தப் பிரம்மாணடமான வில்லை—

சீதையைத் திருமணம் செய்துகொள் வதற்காக, அவள் கழுத்தில் அணிவிக் கத் தக்க மாலையாகவே மதித்து எளி தாக எடுத்துவிட்டானும்.

> ஆடக மால்வரை அன்னது தன்னைத்
> தேடரு மாமணி சீதை எனும்பூந்
> தோடலா கொம்பினைச் சூட்டிட நீட்டும்
> ஏடவிழ் மாலை இது என்ன எடுத்
> தான்.

சரி, அதித்தபடி, சுயம்வர சபையில் இருந்தவர்கள்,

**எடுத்தது கண்டனர்! இற்றது கேட்டார்!**

தவிர அவர்களுக்கு வேறு ஒன்றும் தெரியாதாம்.

இப்படியாக, சிவதனுசை ஒடித்த இராமனின் திருக்கைகளைச் சேவித்த வர்களகூட, நேரில் பார்த்தவர்கள் கூட, "இந்த மிக மகத்தான சாதனை யைச் செய்த திருக்கைகள் இவை களா!" என்று நம்பமுடியாமல் ஆச் சரியப்பட்டனர். மிதிலை மக்கள் அந்தத் திருக்கைகளின் அழகிலே, திறத்திலே, தீரத்திலே சொக்கிக் கிடந்தார்கள், நன்றியும் மகிழ்ச்சி யும் கலந்து.

**'தடக்கை கண்டாரும் அஃதே'.**

எனவே, இராமனின் தோள்கள், தாள்கள் தடக்கைகள் மூலம் மூன்று அரிய சம்பவங்களைக் காட்டி, ஜால வித்தை செய்கிறார் கவிச் சக்கரவர்த் தியாம் கம்பநாட்டாழ்வார்.

இராமனின் தோள், தாள், தடக் கைகளைச் சேவித்த மிதிலையின் வாள் கொண்ட கண்ணார்களை, இன்னும் ஒரு மெருகு போட்டுக் காணபிக்கிறார் கம்பநாட்டாழ்வார். பார்த்தவர்கள் சாமானிய ஜனங்கள் அல்லவே. பல ஊழிக் காலமாக இறைவனுடைய வடிவழகையும், தத்துவத்தையும் அறிய முயன்றுவரும் சாதுகோட்டி யர்களைப்போல, மிதிலை மக்களும் அவனுடைய வடிவழகையும் குணவழ கையும் காண முயன்றார்களாம்.

**"ஊழ்கண்ட சமயத்(து) அன்னான், உருவு கண்டாரை ஒத்தார்"**

இதனால் எத்தனை அரிய பெரிய தத்துவங்கள் விளங்குகின்றன!

**5. அவதாரந்தோறும் உடன் பிறக்கும் பிராட்டியின் நோக்கம்:**

இறைவன் உலகில் அவதரிக்கும் போதெல்லாம் பிராட்டியும் உடன் அவதரிக்கின்றாள். காரணம், "ஈசு வரன் தன் இச்சையாக மக்களின் குற்றங்களைக் கண்டு அவர்களைத் தண் டித்துவிடுவானோ" எனப் பயந்து அதைத் தடுப்பதற்கே.

முமுட்சுப்படியின் த்வய அதிகாரத் திலே, பிராட்டியின் இந்தத் தன் மையை வெளியிட்டருளுகிறார் பிள்ளை உலகாசாரியர்.

"ஈசுவர சுவாதந்தரியத்தையும், சேதனனுடைய (ஜீவாத்துமாக்களின்) அபராதத்தையும் கண்டு, அஞ்சமாட் டாள்". முமுட்சுப்படி (132)

இக்காரணத்தினால்தான், இறைவ னோடு அவதாரம் தோறும் பிராட்டி யும் அவதரிக்கிறாள்.

எனவே, இராமனாக இறைவன் அவ தரித்தபோது, பெரிய பிராட்டியாரும் சீதா பிராட்டியாக அவதரித்தாள்.

**6. இராமன் சிவதனுசை ஒடித்தது ஏன்?**

இங்கே நாம் கவனிக்க வேண்டிய மிக நுணுக்கமான, சிகரமான பாகம் வருகிறது. அர்ச்சுனன், திரௌபதி யின் சுயம்வரத்தில் வில்லை நாணேற்றி மீனக் குறியை அடித்தான். இங்கே சீதையின் சுயம்வரத்தில் வெறும் வில் தான் உள்ளது. அம்பு இல்லையே. மேருவைப் போன்ற வில்லைக் கை யாண்டு வளைத்தல்லவா பராக்கிர மத்தைக் காட்ட வேண்டும்? அது வும் வானுலகில் ஏற்கனவே திரு மால்—சிவன் போரில் உடைந்து விட்ட வில்லாமே. அப்படியானால் அதை ஏன் வளைக்க வேண்டும் மேற் கொண்டு?

**ஸ்ரீராமனுக்கு சீதையிட்ட நிபந்தனை:**

பெரிய பிராட்டியார், சீதாபிராட் டியாராக மிதிலையிலே அவதரித்த பிறகு, இராமனுக்கு விசுவாமித்திர மாமுனி கற்றுத்தந்தக்கலைகளைப்பற்றி எல்லாம் அறிந்தாள்

பிரபஞ்சத்தை ஆளும் (அரசனுக் கும்) இறைக்கும், உலகை ஆளும் இறைவனுக்கும் இரண்டு குணங்கள் பொதுவானவை. ஒன்று துஷ்ட நிக்ரகம், மற்றையது சிஷ்ட பரிபா லனம்.

இராமன் தாடகை வதம் மூல மாகத் துஷ்ட நிக்ரகம் பயின்றான். அகலிகை சாபவிமோசன மூலம் சிஷ்ட பரிபாலனமும் பயின்றான்.

சீதாபிராட்டி இந்த இரு குணங் கள் மட்டும் அமைந்த மாப்பிள்ளை தனக்குத் தேவையில்லை என்றாள்.

"நான் உலகின் தாய். எனவே என் மக்களில் சிலரைத் துஷ்டர்கள் என்று வேறுபடுத்தி அவர்களை நிக் கிரகம் செய்ய ஒப்பமாட்டேன். சர்வ லோகமும் அறிய இராமன் (பெரு மாள்) துஷ்டர்களையும் பரிபாலனம் செய்வதாக, (காப்பாற்றுவதாக)ச் சபதம் பூண்டால்தான் அவரைத் திருமணம் செய்து கொள்வேன்" என்றாள்.

சிஷ்ட பரிபாலனத்தின் சின்ன மானது நாரணன் வலியில் ஆண்ட வில். துஷ்ட நிக்ரகத்தின் சின்ன மானது சம்மாரமூர்த்தியான சிவ னின் வில்.

துஷ்ட நிக்ரகக் கொள்கை சிஷ்ட பரிபாலனக் கொள்கையைவிடத் தாழ்ந்தது என்பதைக் காட்டவே முன்பு சிவதனுசு நாராயண தனு சுடன் தேவர்கள் அறிய மோதி வீரல பட்டது

அந்தத் துஷ்ட நிக்ரகச் சின்ன மான சிவதனுசை, சுயம்வர மண்டபத் திலே அடியோடு முறித்து, அதன் மூலம் 'இனி துஷ்ட நிக்ரகம் செய்வ தில்லை. துஷ்ட பரிபாலனம்தான் செய்வேன்' என்று பலர் அறியச் சபதம் பூணவேணும் என்றாள் சீதா பிராட்டி. இதையே பலகணி வழி

யாகச் சீதை இராமனைப் பார்த்த போது நயன (கண் வழி) பாஷையில தெரிவித்தாள். இதை இராமனும புரிநது கொணடான. அப்படியே ஒப்புக கொண்டு சிவ தனுசை முறித்தும் போட்டான இராமன.

7. இவள சநததியின் ஏறறம :

இதனால் ஒரு சபரசமும் ஏற்பட்டது. சீதாபிராட்டியுடன் உடன எழுந தருளியிருககையில துஷட நிகரகம் செய்வதில்லை. துஷட பரிபாலனம தான். ஆனால அவள் அருகில இல லாத சமயம இராம அவதார நோக கம் நிறைவேறவே துஷ்ட நிகரகம நடைபெறலாம.

இதை அடிபபடையாக வைதது பிள்ளை உலகாசாரியர் முமுட்சுப் படியில் பிராட்டியின் பெருமையாக ஓர் இரகசியத்தை வெளியிடுகிறார்.

"இவள சந்நிதியாலே காகம் தலை பெறறது.

அது இலலாமயாலே ராவணன முடிந்தான்." (முமுட்சுப்படி—135)

8. சேர்த்தியில் செய்யும தொணடு :

சீதையைக காயப்படுததி அப சாரப்பட்ட காகாசுரன், சீதையின முன்னிலையில அவளுடைய கருணைப் பரிந்துரையால் தலை தபபினான்.

சீதையைத தீணடாத இராவ ணனோ, தலைகளை இழநதான், பிராட்டி எதிரில பரிநதுரைக்க இன மையாலே!

எனவே நாம் பெருமாளை அடையும் போது, "இளையபெருமாளைப் போல (பெருமாளும் பிராட்டியுமான) இரு வருமான சேர்த்தியிலே (தொண்டு) அடிமை செயகை முறை" என்றும்,

"அடிமைதான சிததிப்பதும, ரஸிப்பதும அச்சேர்த்தியிலே" (பொறுபபது இவளுக்காக) என்றும் உபதேசித்தருள்கிறார் பிளளை உலகா சாரியர். (முமுட்சுப்படி-168, 169)

இருவருமான சேர்த்தியிலே, அடிமை செய்தால், நம குற்றங்களைப் பொறுத்தருளும்படி ஈசுவரனிடம் புருஷகாரம செய்ய முடியுமா பிராட் டியால எனபச சநதேகம வேணடாம்.

"நீரிலே நெருப்புக் கிளருமா போலே (பெருமாளின) குளிர்ந்த திரு வுளளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறநதால் பொறுபபது இவளுக்காக" என இதை விளக்குகிறார் பிள்ளை உல காசாரியர். (முமுட்சுப்படி - 127)

"முரட்டுச் சுபாவமுடைய அநு மனையே திருத்தி, அசோகவன அரககி யரை அவனிடமிருந்து காப்பாறறிய பிராட்டி, தன் சொற்படிக கேட்கக் காத்திருக்கும் பெருமாளை நிச்சயமாக நம குறைகளைப் பொறுத்து ரட்சிக் குமபடிச செய்வாள" என்று உபதே சிககிறார் பிள்ளை உலகாசாரியர்.

"திருவடியைப் (அநுமனைப்) பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனை (பெருமாளைப்) பொறுப் பிககச் சொலல வேணடாவிறே!" (முமுட்சுப்படி-129).

"பிராட்டி, ராட்சசிகள குறறம் பெருமாளுககும் திருவடிக்கும் (அநு மானுககும) அறிவியாதவர் போல" (ஸ்ரீவசன பூஷணம் 366)

9. பிராட்டியின் மூனறு பிரிவுகள :

வடிவாய் வலமார்பினில வாழ் கினற மஙகையும், 'அகல கில்லேன் இறையும்' என்று அவன மார்பில் உறையும் அலர்மேல் மஙகையுமான பிராட்டி, சீவாததுமாக்களை இரட் சிக்கும் பொருட்டும, தன் தனமையை வெளிப்படுததும பொருட்டும், மூனறு காரணஙகளுக்காகப் பெருமாளை விட்டுப் பிரிகிறாள. அவையாவன,

1. தன கருணையை (கிருபையை) வெளிபபடுத்த.

2. அவன் இட்ட வழக்காக இருக கும் தன் தன்மையை (தன் பாரதந் திரியத்தை) வெளியிட.

3. அவனைத்தவிர வேறு கதியில்லை என்பதை (அநநயார்கத்தை) வெளி யிடுகைக்காக.

இம்மூன்று காரணங்களுக்காகவும் பெரிய பிராட்டியார் சீதாபிராட்டி யாக அவதரித்தபோது பிரிந்ததைக் காணலாம்.

1. முதலாவதாக இராவணனால் தான பிரிககப்படுவதாகக் காட்டி, முதலில் பிரிந்தபோது, தேவமாதர் களை இராவணனது சிறையிலிருந்து மீட்டும், அசோகவன அரககியர்களை அநுமனிடமிருந்து காப்பாற்றியும் தனது கருணையை (கிருபையை) வெளியிட்டாள்.

2. இரணடாவதாக மணிவயிறு வாய்த்திருநதபோது பெரிய பெரு மாளின் ஆணையால வால்மீகி ஆசிர மததில் விடப்பட்டபோது பிரிந்தது. அவன (இராமன) இட்ட வழக்காகத் தான் இருப்பதை பாரதநதர்யத்தை வெளிப்படுத்தவே. இதனையே, பிராட்டி சுய சக்தியை (தன்னைத் தானே காப்பாற்றிக கொளளும திறமையை) விட்டாள் என்று காட்டு கிறார். (ஸ்ரீவசன பூஷணம்-83)

3. சீதா பிராட்டி வால்மீகி முனி வரின ஆசிரமததிலிருந்து அயோத் திக்கு மீண்ட பிறகு, பூதேவியை நோக்கி "நான் தூய்மையானவள் என்பதைக் காட்ட உன்னுள் இடம் தருவாளாக!" எனறு சூளுரையிட்டு பூதேவி அளித்த பீடத்தில் அமர்ந்து பூமிக்குள் மறைநது பிரிந்தபோது 'இராமனைத்தவிர வேறு கதியில்லை' என்று வாழ்ந்து (அநநயார்கத்து வத்தை) வெளியிட்டாள்.

பிராட்டியின இப்பெருமைகளைப பிளளை உலகாசாரியா ஸ்ரீவசனபூட ணததில் விளககியருளகிறார்.

1. "பிராட்டி முற்படப் பிரிந்து தது தனனுடைய கிருபையை வெளி யிடுக்கைககாக.

2. நடுவிற பிரிந்தது பாரதந்தர் யததை வெளியிடுககைக்காக.

3. அநநதரம (கடைசியாக) பிரிந் தது அநந்யார்கத்துவததை வெளி யிடுகைக்காக. (சூத்திரம-9)

10. பரமாத்துமாவை அழகாலே திருத்தலும், ஜீவாத்துமாக்களை உபதேசத்தாலே திருததலும

பிராட்டியின ஏனைய முக்கியமான சில சிறநத குணஙகளைக் காணபோமாக.

பிராட்டி, இறைவனுடன் சோந திருப்பினும் பிரிநதிருபபினும் சீவர்கட்கு இறைவனின கருணையைப்பெற உதவுவாள்.

"சமச்லேஷ விச்லேசஷங்கள் இரணடிலும புருஷகாரதவம் தோன்றும."

கூடியிருக்கும் நிலையில ஈசுவரனைத திருததுவாள். பிரிந்திருககும் நிலையில சீவர்களையும் திருத்துவாள். இருவரையும் தன் இனிய உபதேசததாலே திருத்துவாள.

சம்சலேஷ தசையில் ஈஸ்வரனைத திருத்தும்; விசசேலஷ தசையில சேதனனைத் திருத்தும். இருவரையும திருததுவதும் உபதேசததாலே. (உபதேசம் பலனளிக்காவிடில்) உபதேசத்தாலே மீளாதபோது, சேதனனை அருளாலே திருத்தும். ஈசுவரனை அழகாலே திருத்தும்.

(ஸ்ரீவசனபூஷணம-10, 11, 12, 14)

இராம நம்பியைக் காணச் சீதை நஙகைக்கு ஆயிரம் நயனம வேணடும எனறு எடை போட்ட கமபநாடர், சீதையான கொம்பினைக காணும தோறும் (ஒவ்வொரு முறை பார்ககும் போதும) இராமகுரிசிற்கும அன்னதேயாம எனறு சீதாபிராட்டியின் வடிவழகைச சிறபபித்துளளாா.

எனவே, பிராடடி தன் கடைசி ஆயுதமாக தன அழகாலே பெருமானைத திருத்துகிறுள எனபதில் என்ன ஐயம. பெரிய பிராட்டியாரின பெருமையை, அதாவது வைபவததை சீதாபிராட்டியின மூலமே சிறக்க அறிந்தோம.

11. துவயமே ஸ்ரீ வைணவரின் துவசம :

பிராட்டியின பெருமையை மிகச சிறந்த முறையில் தருவது துவய மந்திரமேயாகும்.

'முமுடசுப்படி' எனனும் அரிய நூலில், மோட்சததில் விருபபமுடைய ஸ்ரீ வைஷ்ணவாகள அறிய வேணடியவை.

1. திருமநதிரம.

2. துவயம.

3. சரம சுலோகம ஆகிய மூனறு எனறும், சாதாரணமாக எல்லா நூல்களுமதேகததாலே பேறு எனறு போதிபபதாயும,

1. திருமநதிரம ஆதமாவாலே பேறு எனறும,

2. சரம சுலோகம ஈஸவரனாலே பேறு என்றும,

3. துவயம பெரிய பிராட்டியாலே பேறு எனறும உபதேசிப்பதாயும அருளுகினறுர்.

"எல்லா பிரமாணங்களிலுமதேகததாலே பேறு எனகிறது.

1. திருமநதிரததில ஆத்மாவாலே பேறு என்கிறது.

2. சரம சுலோகத்தில் ஈஸவரனாலே பேறு எனகிறது.

3. த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறு என்கிறது."

(முமுட்சுப்படி-118)

1. ஆத்மாவோடுகூடிய தேகததை அடக்குவது கடினம். எனவே தேகததால பேறு பெறுவது அரிது.

2. சாவ சுதநதிரனான ஈசுவரனும நம வசப்படுவது அரிது. ஆகையால் ஈஸவரனால பேறுபெறுவதும கடினம்.

ஆனுல் நம தாயாராகிய பெரிய பிராட்டியோ, நம்மைக் காப்பாறறவே காததுளளாள. எனவே துவய மநதிரமே நமககுத தஞ்சமாகும்.

பெரிய பிராடடியாருடைய பரிந துரையான புருஷகாரமே கேட்பாரற்ற சுதநதிரனான பெருமானின் கருணைககு அடிகோலியாகும. வேறு கதியில்லை.

12- பிராடடியாராலேதான பேறு :

"பெரிய பிராட்டியாராலே பேறுகை யாவது இவள (பரிந்துரைத்தால் அல்லது) புருஷகாரமானலல்லது ஈசுவரன காாயஞ செய்யான என்கை."

(முமுட்சுபபடி-119)

1. ஸ்ரீமந்நாராயண சரணௌ பிரபதயே.

2 ஸ்ரீமதே நாராயண ஆய நம

என்பதே துவய மநதிரமாகும. இது மநதிரரதனம என்றும போறறப்படும.

துவயத்தின முதல வாககியம, பெரிய பிராட்டியாரைத துணைக கொணடே பெருமானுடைய இரணடு திருவடிகளையும உபாயமாகப் பற்ற வேணடுமென்று போதிககிறது.

இரணடாம வாககியம், பெரிய பிராட்டியாரும பெருமானுமாகிற இருவருடைய சோத்தியில் எப்போதும அடிமையும், குறறேவலும் புரிய வேண்டுமென உபதேசிககின்றது.

"இதில் முற்கூற்றுல், பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈசுவரன திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. பிறகூற்றுல் அசசேர்ததியிலே அடிமையை இரககிறது"

(முமுட்சுப்படி-122)

எனவே பெரிய பிராட்டியாரின் பரிநதுரையே நமக்கு வழிகாட்டி; வாழவிற்கு விமோசனம

நமது பிரபன்ன ஜனகூடஸ்தராகிய நம்மாழ்வாா அலர்மேல மஙகையை முனனிட்டு, அமரர் விரும்பும திருவேஙகடததானைச சரணடைவதைப் பினபற்றி நாமும் சரணடைநது உயவோமாக!

"அகலகிலலேன இறையும" என்று
அலர்மேல மங்கை உறைமார்பா'
நிகரில் புகழாய்' உலகம் மூனறு
உடையாய்! எனனை ஆள்வானே!
நிகரில அமரர் முனிக்கணஙகள
விரும்பும திருவேங்கடத்தானே!
புகல ஒனறு இலலா அடியேன், உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே!

*

சென்ற இதழ்த் தொடர்ச்சி

இடம்: வைகுந்தம்.

"தேவாதி தேவா! வேதவதி தங்கள் வரவுக்காக விந்திய மலைச் சாரலில் தவம்செய்கிறாள் இன்னும் மௌனம் ஏன் சுவாமி?"

"நாரதா! அவள் என்னை பக்தியால் அடைய நினைக்கிறாள். நான் அவள் பிரேமையை விரும்புகிறேன். அதற்காக அவள் அந்த உடலை தியாகம் செய்தாக வேணடும். கசனைக் கொன்று விட்டு சம்பாசுரன் வேதவதியிடம் போய்க்கொண்டிருக்கிறான். ராவணனும் மாரீசனை அனுப்பி இருககிறான். என் பங்குக்கு ஒரு மோகனாஸ்த்திரத்தை நானும் எய்து வைக்கிறேன். நடப்பதைப் பார்!"

தன் முன் நிற்பவன் சம்பாசுரன் என்பதை உணர முடியாத மயக்கத்தில் ராவணனும், "என்ன அற்புதமான அழகு. ஆ ஹா! ஆனந்த சௌந்தரிய ஜோதி! வேதவதி! வேதவதி ..... இனி நீ என்னுடையவள் தான்" என்று பிதற்றினான்.

கோபம் கொண்ட சம்பாசுரன், "ராவணா! உன் அதிசய சௌந்தர்ய ஆராதனையை முதலில் நிறுத்து, என்னை நன்றாய்ப் பார். மாரீசன் தான் மது மயக்கத்தில் என்னை வேதவதி என நினைத்து தூக்கிவந்து விட்டானென்று நினைத்தேன். நீயோ அவனுக்கு மேல் உளறுகிறாயே. அரக்கர்களுக்கு ஆண்பெண் பேதஙகள் கூடவா தெரியாது. நீங்கள் நினைப்பது போல் நான் வேதவதி அல்ல. அசுரர்களின் தலைவன் சம்பாசுரன்" என்றான். மாரீசன் அதிர்ந்தான. "ஆமாம்! சம்பாசுரன்தான். ராவணா இதென்ன குளறுபடி?" "என்னைக் கேட்கிறாயா மாமா? வேதவதிக்கும் இந்த பூத வடிவத்துக்குமா உனக்கு வித்தியாசம் தெரியவில்லை? உனக்கு என்ன நேர்ந்தது?" என்றான் ராவணன எரிச்சலுடன்.

"ராவணா! என்னை மட்டும் குறை கூறாதே. நீயும்தான் இவனை வேதவதி என நினைத்து அதிசய அழகை ஆராதித்தாய்."

"போதும மாமா. இவனை இழுத்துக் கொணடு போ."

"கோபப்படாதே ராவணா! இருவருமே இவனை வேதவதி என்று நினைத்து ஏமாநதிருக்கிறோம. இந்த மயக்கத்துக்கு ஆதார சக்தி ஏதோ இருக்கிறது."

"அதை நானே கண்டுபிடிததுக் கொள்கிறேன்.. நீ போ."

மாரீசன் போகும் வரை காத்திருந்த மண்டோதரி, "பிரபு இன்று சிவராத்திரி, உங்கள் உள்மன மயக்கத்திலிருந்து விடுபட்டு வாருங்கள்."

"மண்டோதரி, மயக்கமா? எனக்கா? என்ன சொல்கிறாய் நீ!"

"போதும் பிரபு. எனக்கு எல்லாம் தெரியும் வேண்டாம் இந்த விபரீத விளையாட்டு. வேதவதியை மறந்து விடுங்கள்."

"சாத்யமில்லை மண்டோதரி. அது என்னால் முடியாது. நான் வேதவதியை அடைந்தே தீருவேன்."

"பிரபு! அவள் பரஸ்திரீ. நளகூபரனின் சாபத்தைப் பற்றி நாரதர் சொன்னதை மறந்து விட்டீர்களா? வேண்டாம் வேதவதியை மறந்து விடுங்கள். ஏனோ என் நெஞ்சைப் பயம் பற்றியிருக்கிறது. ஐயனைத் துதித்தாலும் அது அடங்குவதற்கு பதில் அதிகரிக்கிறது".

மண்டோதரி ராவணனின் கால்களில் விழுந்து மன்றாடினாள். அவளுடைய கண்ணீரும் புலம்பலும் பயனற்றதாகி விட்டது.

# காலமும் விதியும்

"தேவதேவா! ஒரே சமயத்தில் அசுர சக்தி, அரக்க சக்தி, அமர சக்தி மூன்றும் ஒரு பேதைப் பெண்ணைச சூழ்கின்றனவா? பிரபு...இது என்ன விளையாட்டு?"

"விளையாடுவது நானல்ல நாரதா! விதி. வேதவதி தன்னை மறந்த நிலையில் இருககிறாள். அங்கே போய் நடப்பதைப் பார்."

நாரதர் அங்கிருந்து செல்கிறார்.

வேதவதியை கவர வநது கொணடிருக்கும் சம்பாசுரனும் மாரீசனும் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்கின்றனர். மாரீசன் மயக்கத்துடன சம்பாசரனை வேதவதி என நினைத்து அவள் அழகை வர்ணிக்கிறான். சம்பாசுரனோ 'தான் வேதவதி இலலை' என்று மறுக்கிறான். முடிவில் மாரீசன், "பிரகஸ்பதியின் பேரத்தியாய் பிறந்து விட்டு இப்படிப் பிதற்றாதே. பேசாமல் அடங்கி ஒடுங்கி வந்துவிடு அப்புறம் என்னை முரடனென்று சொல்லாதே" எனறு சம்பாசுரனைத் தூக்கிக் கொண்டு போகிறான்.

செல்வி. டி. ஆர். மேகலை,
செங்கலபட்டு.

"மணடோதரி! வேதவதி எனனுடையவளாக வேண்டும். நான் அவளை அடைய யாரும் குறுக்கே நிற்கவிட மாட்டேன். அதிலும் வேதவதி நம் குல வைரி விஷ்ணுவின் உடமை. ஆகவே கூடாது. வருகிறேன், என்னைத் தடுக்க யாராலும் முடியாது."

ராவணன் விந்தியமலைச்சாரலுக்கு விரைந்தான்.

அங்கு...

"போதும் சுவாமி! உங்கள் அறிதுயிலைக் கலைத்து விட்டு அடியாளை ஏற்க வாருங்கள். விண், மண், நீர், நெருப்பு, காற்று என்று எங்கும் எதிலும் எல்லாமாக நிற்கும் உங்களுக்கு ஆகாயவாணி பூமாதேவியரை சாட்சி வைத்து நான் பத்தினியாகி விடுகிறேன். என் மணமாலையை ஏற்றுக்கொள்ள வாருங்கள சுவாமி" என்று வேதவதி மனமுருக பிரார்த்தித்து காட்டு மலர்களால் தொடுத்த மாலையை மகா விஷ்ணுவின் விக்கிரகத்துக்கு சூட்டப்போன சமயம்...

"நில் வேதவதி, அந்த மாலைக்குரிய தோள்கள் இதோ இங்கே இருக்கின்றன, வா" என்று அழைத்தான் அங்கு வந்த ராவணேஸ்வரன்.

"யார் நீங்கள்?"

"என்னையா யாரென்று கேட்கிறாய்? வேதவதி! நான்தான் திரிலோகாதிபன், தசமுகன், பிரதாப லங்கேஸ்வரன். வா என்னை ஏற்றுக் கொள்ள வந்துவிடு".

"ஓ...! நீங்கள்தானா அது?"

"ஆம் வேதவதி! உனக்காகவே வந்திருக்கிறேன. என்னைக் காக்க வைக்காதே. உன் அழகு என்னைப் பித்தனுக்கி விடுகிறது. சீக்கிரம் அந்த மணம நிறைந்த மலர் மாலையை எனக்குச் சூட்டிவிடு" என்று உருகினுன் ராவணேஸ்வரன்.

"நாயகனுக்கு படைதத நிவேதனத்தை நாய் தின்ன விடமாட்டேன் ராவணு. போய்விடு. ஹரியின பகையைத் தேடிக் கொள்ளாதே. நான் நெருப்பு, நீ கூளம். இரண்டும் சேரமுடியாது. சேர்ந்தால் புகை தான் பிறக்கும். உடலழகைக கண்டு மயங்காதே. அது வெறும் மயக்கமே."

"வேதவதி! நீ என்னுடையவள். உன்னை அடையாமல நான் இங்கிருந்து போகமாட்டேன். இந்த ராவணனின் கைக்கு எட்டாத எல்லையும் இடமும் இல்லை என்பது உனக்குத் தெரியாது பெண்ணே! முடிந்தால உன் ஹரியைக கூப்பிடு. அவன வருகிருனு பார்ப்போம" என்று சொல்லியபடியே வேதவதியின் கையைப் பிடித்து இழுக்கிருன ராவணன்.

# "நீலவண்ணக் கண்ணன்"

கவிஞர் சோமசுந்தரப பெருமாள-தங்கவயல்.

நீலவண்ணக கண்ணன்—அவன
நெஞ்சில வாழும மன்னன
வாலக குழந்தை போல—அவன
வடித்த திந்த ஞாலம. ...(நீல ..)

பூமிபாரம் தணிக்க—அவன்
பூமியில எடுத்தது அவதாரம்
அகந்தை வாழும இடத்தில—அதை
அழிகக வரும் காலன. ...(நீல...)

பிறநது வளாந்தது ஓரிடம்—அவன்-
பிறப்பை ஒழிககும் புகலிடம்
கீதை யெனனும் வேதம்—அதைக்
கேட்டால் போகும பாபம். ...(நீல...)

நீதிகேட்டு தூது செனருன்—அவன்
நினைததவாககு துணையாய் வந்தான
சஙகை எடுதது ஊதினுன்—அவன்
புஙகில் சரிதம ஆகினுன. ..(நீல..)

வேதவதி ராவணனின் பிடியினின்று தன் கையை விடுவித்துக் கொணடு "மூடனே கறை படிந்த உனது கரங்களால என்னை தொட்டு விட்டாய். நீ தொட்ட இந்த உடலுடன் என சுவாமியிடம் நான் போக மாட்டேன். என்னை நீ அடைய முடியாது. என் சவத்தை எடுத்துக் கொள். ஆனுல நான மறுபடி பிறப்பேன. அந்த ஹரியையே மணநது உன்னை அழிகக வருவேன. என் காரணமாகவே உன் பதது தலைகளும் தரையில் உருளும். அரகக குலத்தின் அழிவுக்கும் நானே காரணமாவேன். சுவாமி வாருங்கள! பூகமபம், இடி, மின்னல், நீர், நெருப்பு என்று ஏதாவது ஒரு வடிவில் வந்து என்னை அழித்து விடுங்கள்" என வேதவதி அழுது புலம்பியதும நாறபுறமும் நெருப்பு சூழ்ந்தது. ராவணன் பதைத்து அலற வேதவதி அதில் பாய்ந்து தன் உயிரை மாய்த்துக கொள்கிருள்.

ராவணன் பொருமினுன.

"அகனி! உனககு அத்தனை ஆணவமா? நான் விரும்பிய ஒன்றை நீ அழித்து விட்டாயா? அவள உயிர் போய்விட்டதா? மாட்டேன, விட மாட்டேன். காலதேவா வேதவதியின் உயிரை விட்டுவிடு. அமிர்தத்தை ஊற்றி அவள் உடலைத தழைக்க வைத்துக் கொள்கிறேன். காலதேவா அவள் உயிரை விட்டு விடு. காலா! நீயுமா தசமுக ராவணனின் ஆணையை அசட்டை செய்கிருய்? இதோ! உன்னை அழிதது விடுகிறேன் பார, மரணமே உனககு மரணத்தைக கொடுககிறேன். காலா உன் காலத்திற்கு ஒரு முடிவு கட்டுகிறேன்" எனக கட்டு மீறிய கோபத்தில் கத்திக் கொணடு ஓடுகிருன ராவணன்.

அமைதியாகப் பாய்ந்து கொண்டிருக்கும் ஆற்று வெள்ளத்தில் நிதானமாய் போய்க கொண்டிருக்கிறது ஒரு படகு. ராவணன் நின்ருன். "காலா! மரணத்தில் தானே நீ பிர

சன்னம். இதோ உன்னைப் பிடிக்கிறேன் பார். இந்தப் படகில் இருக்கும் உயிர்களை உனக்குப் பலியாக்குகிறேன். இந்த ஜீவன்களைப் பற்றிக் கொள்ள வா!" என்று படகினைக் கவிழ்த்து விட்டுச் சிரித்தான்.

தண்ணீரில் விழுந்தவர்கள் கூவி அலறித் தத்தளித்தார்களே தவிர யாரும் இறக்கவில்லை. பெருஞ்சினம் கொண்டான ராவணன்.

"தப்பி விட்டாயா? காலா உன்னை விடுவதில்லை" என்று முனகினான் ராவணன்.

காலன் மெல்லச் சிரித்தான், "தசமுகா! நான் மிருத்யு. அதாவது மரணம். வெறும் வெளியில் வடிவமற்று உலாவும் இயக்கம். கண நேரத்தில் இயங்கி ஓயும் சக்தி. எனக்கு உருவமில்லை. வடிவம் இல்லை. என்னைப் பிடிக்க உன்னால் முடியாது. வீணாக உயிர்ச் சேதங்களை ஏற்படுத்த முயலாதே போய்விடு."

"எமதர்மா! வேதவதியின் உயிரை மீட்காமல் போகமாட்டேன்"

"அது உன்னால் முடியாது ராவணா! நானாக உன்னைத் தொட்டாலும் நீயாக என்னைத் தொட்டாலும் உனக்கு மரணம் நிச்சயம். நான் அழிப்பவன். நீ அழிபவன் வீணில் முரண்டு பிடிக்காதே. போய்விடு."

"காலா! அண்ட சராசரங்களையும் அழிக்க நேர்ந்தாலும் அதனுடன் உன்னையும் சேர்த்து அழிப்பேன். இல்லையேல் நானாவது அழிவேன்".

"அகால மரணம் உனக்கு விதியில்லை ராவணா! ஆனால் அதை நீ வருந்தி அழைக்கிறாய். நல்லது. கடைசியாக உனக்கு ஒரு வாய்ப்புத் தருகிறேன். என் காலதண்டத்தைக் கையிலெடுத்து விட்டால், உனக்கு, பிழைப்பில்லை. இப்போதாவது போய்விடு. இதோ நான் வடிவம் எடுக்கிறேன்".

காலதேவன் தன் வடிவத்தைக் காட்ட, "காலா! நானும் உனக்கு கடைசி வாய்ப்புத் தருகிறேன். இந்த வாள் சிவபெருமான் எனக்களித்தது. வேதவதியின் உயிரை விட்டுவிடு. உன்னை மன்னித்துவிடுகிறேன்."

"நீ மன்னிக்கலாம். ஆனால் மரணம் மன்னிப்பதில்லை ராவணா. முடிந்தால் என் பாசத்தை தடுத்துக் கொள்" என்று காலன் காலதண்டத்தை ஓங்கும் நேரத்தில், "காலா! ராவணா! நிறுத்துங்கள். என்ன இது? காலதேவா! தசமுகனுக்கு தெய்வ சக்தியால் மரணமில்லை என்பது உனக்குத் தெரியாதா? இப்போது நீ காலதண்டத்தை வீசினால் அழியப் போவது ராவணனல்ல. அகிலம். லங்கேஸ்வரா! காலகாலன் உனக்களித்த வாளை நீ வீசினால் என்ன நேரும் என்பதை யோசித்தாயா?" என்றார்

"இந்தக் காலதேவனின் காலத்துக்கும் ஒரு முடிவு ஏற்படும நாரதரே."

"அதன் பலன் ராவணா?"

"மகரிஷே! உலகத்தில் மரணமே இருக்காது."

"நல்லது ராவணா. மரணம் இல்லையென்றால் நீ யாரைக் கொல்வாய்? எமன் இல்லாவிட்டால் மரணமில்லை. மரணமில்லாவிட்டால் மனிதருக்கு உன்னிடம் பயமில்லை உன்னை மதித்தும் வணங்க வேண்டியது இல்லை. அப்புறம் உன் திரிலோகாதிபத்யத்தின் கதி?"

"பார்த்தீரா நாரதரே! எனக்கிருந்த கோபவெறியில் இச்சிறு உண்மையைக் கூட மறந்து விட்டேன். காலதேவா பிழைத்துப் போ! ஆனால் வேதவதியின் உயிரை விட்டுவிட வேண்டும்" என்றான் ராவணன்.

"காலதேவா! வேதவதியின் உயிர் உன் வசத்தில் இல்லை என்பதை நீ முதலிலேயே சொல்லியிருந்தால் இத்தனை விபரீதங்களும் நேர்ந்திருக்குமா?"

ராவணன் ஆச்சரியமாய், "என்ன? அவள் உயிர் இவன் வசத்தில் இல்லையா? நாரதரே! அவள் உயிர் எங்கே இருந்தாலும் அதை மீட்காமல் விடமாட்டான் லங்கேஸ்வரன்" என்றான்.

ராவணன் சோர்வுற்றவனாய் அந்தப்புரத்திற்கு வர மண்டோதரி அவனை வரவேற்றாள்.

"மண்டோதரி! உன் நாதன் லங்கேஸ்வரன் இன்று முதல்முதலாய் தோற்றான். நாடியதை இழந்து மீட்க வழி தெரியாமல் திரும்பி விட்டான்."

"சுவாமி! வேதவதியைத் தானே சொல்கிறீர்கள். போனால் போகட்டும். இன்று சிவராத்ரி. பூஜை நேரத்தில் எங்கோ போய்விட்டீர்களென்று பதறிவிட்டேன். அபிஷேகத்திற்காக நீர் எடுக்க ஆலயக் குளத்திற்குச் சென்றேன். அங்கே ஒரு கமல மலரில் இருந்தது இந்தக் குழந்தை. பாருங்கள் சுவாமி" என மண்டோதரி குழந்தையைக் காட்டினாள்.

'தேவி! இது...இந்தக் குழந்தை...' என்று ஆரம்பித்த ராவணன் முகம் மாறிக் கோபமானான். "மண்டோதரி, உண்மையைச் சொல், இந்தக் குழந்தை உனக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டுக் கொண்டே வாளை உருவினான் ராவணன்.

பதைப்புடன் மண்டோதரி, 'சுவாமி! இதென்ன குழந்தையைக் கொல்லவா உங்கள் கை உயருகிறது?' என ராவணனைத் தடுத்தாள்.

"இது குழந்தையல்ல மண்டோதரி. என்னை ஒழிக்க வந்த பீடை. நம் குல வைரி ஹரியின் சூழ்ச்சி. இவள்தான் வேதவதி. என்னைக் கொல்ல குழந்தை வடிவில் வந்திருக்கிறாள்."

"சுவாமி இது வெறும் மயக்கம். குழந்தையைக் கொல்ல நான்விடவே மாட்டேன."

"அப்படியானால், அந்தக் குழந்தையோடு உன்னையும் சேர்த்தே அழித்து விடுகிறேன்."

ராவணன் வாளை ஓங்கிய சமயத்தில், "தசமுகா! பொறு. இன்று

முற்றிலும் நீ நிதானமிழந்து விட்டாயே. மண்டோதரி பெண். அவள் ஒரு தாய். தாயுள்ளத்தை வாளால் பணிய வைக்க முடியுமா? இல்லை, உன்னால் அதை அழித்து விடத்தான் முடியுமா? மண்டோதரி, ராவணன் சொல்வது உண்மை தான். இந்தக் குழந்தை வேதவதிதான். உன் கணவனை அழிக்கவே மறுபிறவி எடுத்து வந்திருக்கிறாள்.''

நாரதர் சொன்னதைக் கேட்டு திகைத்த மண்டோதரி, "அப்படியானால் நீங்களே இதை அழித்து விட்டுப் போங்கள்." என்றாள்.

"ராவணா! இந்தக் குழந்தையை ஒரு பேழையில் வைத்து மூடி கடலில் எறிந்துவிடு. மண்டோதரி கண் காணாமல் அது அழிந்துவிடட்டும். அத்துடன் 'லங்கேஸ்வரன் அச்சங்கொண்டான். அதனால் பசிளங் குழந்தையை வாள் வீசிக் கொன்றான்' என்னும் அவதூறும்உனக்கு நேராது" என்றார் நாரதர்.

"அப்படியே ஆகட்டும் நாரதா."

குழந்தையை நாரதர் சொன்னபடி செய்து கடலில் எறிந்த போது இயற்கையின் சீற்றங்கள் பெருகித் தணிந்தன.

"சுவாமி! இன்னும் எத்தனை நாள் இப்படி வேதவதியின் மயக்கத்தில் மதுவையே உணவாக்கிக் கொண்டிருப்பீர்கள்? நீங்கள் ஆண்டவன் சன்னதிக்கு வந்து ஆண்டுகள் பல ஆகிவிட்டதே. இன்றாவது தரிசனத்திற்கு வாருங்கள்" என ராவணனை அழைத்தாள் மண்டோதரி ராவணன் மறுக்கவே அவள் வலுவில் அவனை அழைத்துக் கொண்டு கோவிலுக்கு வந்தாள். சிவபெருமானின் சிலைமுன் நின்று, "சர்வேசா! இது என்ன விளையாட்டு? மூவுலகையும் முடி தாழ்த்தி வணங்க வைத்த உன் பக்தன் இன்று சோர்ந்து விட்டது ஏன்? நீ குடி கொண்ட கைலயங்கிரியையே பெயர்த்தெடுத்த தோள்களின் வீரம் எங்கே போய்விட்டது? இப்படி எங்களை வருந்தி வாழவிடுவதைக் காட்டிலும் எங்களை அழித்து விடுவதே நல்லது" என்று மண்டோதரி அழுது புலம்ப, ராவணன் வெறி கொண்ட வேங்கையாச் சீறி எழுந்தான். "தேவி! நான் அழிக்கும் சக்தி. நான் ஏன் அழிய வேண்டும்? இதோ நான் திக்விஜயம் செய்து என் திரிலோகாதிபத்யத்தை நிலை நாட்டுவேன். வேதவதி! நீ நல்லவள், தூயவள். உன்னைத் தொட்ட என் கரங்கள் கறைபட்டவை. அப்படியானால் இனி உலகில் நல்லது என்பதே இல்லாது செய்து விடுகிறேன்" என்று ஆவேசமாய் சிரிக்கிறான் ராவணன்.

ராவணனின் வெறி கொண்ட கோலத்தைக் கண்ட நாரதர், "ராவணா! இது என்ன கோலம்?" என்றார்.

"வேதவதி என்னை மறுத்து தன்னைத்தானே அழித்துக் கொள்ள காரணமான அந்த ஹரியை பழிவாங்கும் போர்க்கோலம் நாரதரே இது."

"அப்படியானால் நீ மிதிலைக்கு போகப் போவதில்லையா?"

"ஹரி அங்கேயா இருக்கிறான்?"

"இருந்தாலும் இருக்கலாம் ராவணா! ஜனகனுக்கு ஏர் முனையில் கிடைத்த பெண் சீதை. அவளுக்கு மிதிலையில் சுயம்வரம். வேதவதி வேதவதி என்று புலம்புகிறாயே. சீதையைப் பார்த்தால் நீ வேதவதியை மறந்தே விடுவாய்" என்று தன் வேலையைத் துவக்கினார் நாரதர்.

'வேதவதியின் அழகுக்கு ஈடு ஏது நாரதரே?'

"சீதையைப் பார்த்தால் அது உனக்கே புரியும். உனக்கே அதில் ஈடுபாடு இல்லை. அப்புறம் நான் ஏன் அதைப்பற்றி உன்னிடம் சொல்ல வேண்டும்? வருகிறேன்" என்று நாரதர் திரும்ப, சினம் தணிந்த ராவணன், "சுயம்வர நிபந்தனை என்ன நாரதரே? அதைச் சொல்லி விட்டுப் போகலாமே" என்றான்.

"ஜனகனிடம் ஒரு சிவ தனசு இருக்கிறது. அதை தூக்கி வளைக்கிறவனுக்கு ஜானகி மாலையிடுவாள். சரி ராவணா உன்னை நான் மிதிலையில் வந்து சந்திக்கிறேன். மகாதேவ... மகாதேவ..." வந்த வேலை முடிந்த திருப்தியில் தன் பயணத்தைத் தொடங்கினார் நாரதர்.

பின்னொரு நாள்.

"அட! ராவணனேஸ்வரா! சுயம வர மண்டபத்திற்குப் போகாமல் இங்கே நந்தவனத்தில் என்ன செய்கிறாய்?"

"வாரும் நாரதரே! சிவன் வீற்றிருக்கும் கைலாயத்தைத் தூக்கி குலுக்கிய இந்த தோள்களாலேயே அந்தச் சிவ தனுசைத் தூக்க முடியவில்லை. அப்படி இருக்க, ஸ்ரீராமன் என்னும் அற்ப மானிடனா அதைத் தூக்கி வளைக்கப் போகிறான். இது நடக்கிற காரியமல்ல நாரதரே. சீதையை சிறையெடுத்துச்செல்வேன். லங்கையில் எனக்கும் அவளுக்கும் திருமணம் நடக்கப்போகிறது. சீக்கிரம் லங்கைக்கு வாரும்" என ராவணன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வில் முறியும் ஓசை கேட்கிறது.

நாரதர் சிரித்து, "லங்கேசா! தசரத குமாரன் ஸ்ரீராமன் வில்லை வளைப்பதற்குப் பதில் முறித்தே போட்டு விட்டான் போலிருக்கிறது. நான் உன்னை பிறகு சந்திக்கிறேன. வருகிறேன் ராவணா!"

நாடி வந்த காரியம் நலமே முடிந்ததில் மகிழ்ச்சி கொண்ட நாரதர், "காலதேவா! நடப்பதை நன்றாகப் பார். காலமும் விதியும் ஒன்றாக இணைந்து விட்டது. அன்று காலதண்டத்தைக் கையிலெடுத்தாயே... நன்றாகப் பார். அது ராமனின் அம்புறாத் தூணியில ராம பாணமாய் ஜொலிப்பதைப் பார். ஜனக குமாரிதான வேதவதி. ஸ்ரீராமன் தான் அந்த வேதநாயகன. விதி தர்மத்திற்கு மாலை சூட்டுகிறது மனிதர் கணக்கில் இருபது ஆண்டுகள் என்பது தேவர்களுக்குச் சில கணங்களே. அரக்க சக்திகள் இப்போது சரிந்து விழுவதைப் பார். எமதர்மா! காலம் வென்றது."

நாரதர் தம்புராவை மீட்டியபடி தன்வழியே போகிறார்.

# ஸ்ரீ கிருஷ்ணனின் பரத்துவம்

ஸ்ரீய: பதியாய் அவாப்த ஸமஸ்த காமனுய் அகில ஹேய ப்ரத்யநீக கல்யாணகுண ஸ்வரூபனுய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந் நாராயணன் சாது ஜனங்களைக் காப்பாற்றுவதற்காக எடுத்துள்ள அவதாரங்களில் ஸ்ரீ கிருஷ்ணுவதாரம் தலைசிறந்ததாகும். அதையே பகவானின் பூர்ணுவதாரம் என்று எல்லோரும் போற்றுகின்றனர். அதற்குரிய காரணங்களை இக்கட்டுரையில் ஆராய்வோம்.

பகவானுக்கு இரண்டு விபூதிகள் உண்டு. ஒன்று லீலா விபூதி; மற்றது நித்ய விபூதி. பகவான் தாம ஸ்வரூபன. அந்த தர்மத்துடன் க்ஞானம், வைராக்யம், ஐசவர்யம என்ற மூன்று குணங்களும் சேர்ந்திருக்கும். லீலா விபூதியில் க்ஞானம அல்லது உள்ளுணர்வு முக்கியம். நித்ய விபூதியில தாமம, வைராக்யம, ஐசவர்யம் எப்பொழுதும் அழியாமல் இருக்கும். இதையே கண்ணனும் பகவத கீதையின பத்தாவது அத்யாயத்தில,

" विष्टभ्य अहं इदं कृत्सनं ।
एकांशेन स्थितो जगत् ।।"

[ விஷ்டப்ய அஹம் இதம க்ருத்ஸநம! ஏகாம்சேந ஸ்திதோ ஜகத ]

எனக் கூறியிருக்கிறுன்.

லீலா விபூதியில பரமாத்மாவின அம்சங்களாக இயற்கையும ஜீவாத்மாவும உள்ளன. ப்ரக்ருதி அல்லது இயற்கை எங்கும நிறைந்திருந்தாலும் அதற்குத் தனியாகச செயலபடும் சக்தி இல்லை. ஜீவாத்மாவிற்கு உள்ளுணர்வு இருந்தாலும் அதற்கு எங்கும் செல்லும் சக்தி இல்லை. சாங்க்ய மதத்தை அடியொற்றிக் கூறினுல ப்ரக்ருதி கண்ணில்லாதசக்தியென்றும், புருஷன் அல்லது ஜீவாத்மா காலில்லாத முடவன் என்றும நிர்ணயிக்கலாம. ஆகவே முடவன் குருடன முதுகில் ஏறி அவனுக்கும வழிகாட்டிக் கொண்டு தானும் இவ்வுலகத்தில் வலம் வருகிறுன் என்று அறியலாம். அவ்வாறு பயணம் செய்யும் பொழுது முடவன் ஜாக்கிரதையாக கண்ணில்லாதவனைப் போகும்படிச் செய்யும் ஆற்றல் படைத்திருக்க வேண்டும். கண்ணிலலாவிட்டாலும் ப்ரக்ருதியிடம் ஆசை, கோபம், அழுக்காறு முதலிய தீய குணங்கள் உண்டு. அறம், உண்மை ஆகிய நற்குணங்களும் உண்டு. ஆகவே குருடன் கூறும் நற்குணங்களை மட்டும் கேட்டுக்கொண்டு முடவன் அவனையும் வழி நடத்திச் செல்லவேண்டும். குருடன் கூறும் தீய வழிகளில் சென்றுல் முடவன், குருடன் இருவருமே அழிந்து விடுவார்கள்.

---

**திரு கே பிச்சமணி அய்யங்கார்**
**ஸ்ரீரங்கம**

---

ப்ரக்ருதி, புருஷன் இவர்களுக்கு ஆதி, அதாவது, ஆரம்பகாலம் என்பது கிடையாது. அவை எப்பொழுதும் சேர்ந்து இயங்கும் இரு தத்துவங்கள். இந்தக் கருத்தையே கண்ணனும் கீதையின பதிமூன்ருவது அத்யாயத்தில் கீழ்வருமாறு கூறியுள்ளான.

" प्रकृति पुरुष चैव
विद्धि अनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव
विद्धि प्रकृति सभवान् ।।"

[ ப்ரக்ருதிம் புருஷம சைவ
வித்தி அனுதி உபாவபி |
விகாரான்ஸ்ச குணுன்ஸ்சைவ
வித்தி ப்ரக்ருதிஸம்பவாந் || ]

அதாவது, "பிரகிருதி, புருஷன் இவ்விரண்டு தத்துவங்களும அனுதியானவை. விகாரங்கள் குணங்கள் இவ்விரண்டும் ப்ரக்ருதியிலிருந்து உண்டாகின்றன."

புருஷன் தன்னை பரமாத்மாவின் அம்சமாக நினைத்துக்கொண்டு இயற்கையைத் தன் வசமாக்கிக் கொண்டு வாழ்ந்தால் அவன் நற்கதி பெறுகிறுன். "இயற்கையின் ஆராய்ச்சி" என்றும் "பகுத்தறிவாளன்" என்றும் கூறிக்கொண்டு பரமாத்மாவின் ஆணைப்படி வாழ்க்கை நடத்தாதவன் தீய கதி பெறுகிறுன். இவ்விஷயங்கள் பகவத்கீதையின் பதினுருவது அத்யாயத்தில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

பிரம்மசூத்ரத்தின் இரண்டாவது அத்யாயத்தில் மூன்ருவது பாதத்தில் ஆருவது அதிகரணம் "பராயத்தாதிகரணம்" என்று கூறப்படும். அதில் புருஷனுக்கு சுதந்திரம் இல்லையென்றும் பகவான் அநுமதியுடன் தான் அவன் ப்ரக்ருதியுடன் இயங்க முடியுமென்றும் கூறப்பட்டுள்ளது. அவ்வாறு கூறினுல் நல்லவர்கள், தீயவர்கள் செய்யும் கருமங்களின் பயனும் பகவானை பாதிக்குமே என்று ஐயம வருவது இயற்கை. "புருஷன் முதலில் சிந்திக்கும் பொழுது பகவான் தலையிடுவதில்லையென்றும், பிறகு அவனது சிந்தனைக்கேற்றவாறு செயல்புரியும் ஆற்றலைமட்டும் அளிக்கிறுன் என்றும் ஆகவே அவன் செய்யும் நற்காரியங்கள் அல்லது தீய காரியங்களின் பயன பரமாத்மாவை அடைவதில்லை" என்றும் சமாதானம கூறப்பட்டுள்ளது. இதையே பகவானது லீலாவிபூதி என்று கூறுகிறோம.

இந்த லீலா விபூதியின் தன்மையை நம்மாழ்வாரும் திருவாய்மொழியின் முதற்பத்தின் முதல் திருவாய்மொழியில் ஐந்தாவது பாசுரமாகக் கூறியது காண்க:—

" அவரவர் தமதம தறிவறிவகைவகை
அவரவரிறையவ ரெனவடியடை
வர்கள்

**அவரவரிறையவர் குறைவிலரிறையவர்**
**அவரவர் விதிவழி யடைய**
**நின்றனரே"**

பரமாத்மாவின் அம்சமான ஜீவாத்மாவிற்கு க்ஞானம், ஆனந்தம் என்ற இருகுணங்கள் இயற்கையாக அமைந்துள்ளன. இயற்கையுடன் சேர்ந்து தன்னைப் பரமாத்மாவின் அம்சமாக நினைத்துக்கொண்டு அவன் செயல்பட வேண்டுமென்று வேதங்களும் சாஸ்திரங்களும், ஸம்ப்ரதாய நூற்களும் வலியுறுத்துகின்றன. அவன் அவ்வாறு செய்யாமல் தன்னைத் தனியொரு தலைவனுக பாவித்து இயற்கையையும் அடக்கியாள வேண்டுமென்று அவன் தலைப்படும்பொழுது பகவானுக்கு அவதாரம் எடுக்கும் நிலை ஏற்படுகிறது. அவ்வாறு அவன் எடுக்கும் பத்து அவதாரங்களில் க்ருஷ்ணுவதாரத்தில்தான் அவனது பரத்வம் வெளிப்படுகிறது. ஏனெனில் அவன் பிறந்தது ஆவணி என்ற "ஸிம்ஹ மாஸம." ஆவணி மாதத்தில் அனேகமாக பௌர்ணமி திருவோணத்தை அநுசரித்து வரும் திருவோணம் என்றுல் சிரவண நட்சத்திரம். திருவேங்கடமுடையானது திரு நட்சத்திரம். சோதிட நூற்கள் அநுசரித்து சர ராசியான மகர ராசியில் திருவோண நட்சத்திரத்தில் சந்திரன் பிரகாசிக்கும் பொழுது மகர ராசிக்கு எதிரான ஸ்திர ராசியான கடக ராசியில் மக நட்சத்திரத்தில் 4-வது பாதத்தில் கடக நவாம்சத்தில் சூரியன் பிரகாசிப்பது வழக்கமாக காணப்படுகிறது. திருவோண நட்சத்திரத்திலுள்ள சந்திரன் மூன்று லோகங்களையும் தனது கிரணங்களால் பவித்ரமாக்குகிறுன் என்று நட்சத்திர ஸௌக்தம் கூறுகிறது. ஆகவே ஸிம்ஹ மாசம் மிகவும் விசேஷம் என்று கூறப்படுகிறது. திருவோணம், ஹஸ்தம், ரோஹிணி என்ற மூன்று நட்சத்திரங்களும் ஒரே வகுப்பைச் சேர்ந்தவையாகும். இந்த வகுப்பில் திருவோணம் சர ராசியிலும், ரோஹிணி ஸ்திர ராசியிலும், ஹஸ்தம் உபய ராசியிலும் இருந்து கொண்டு சந்திரன் மூலம் பகவானது லீலாவிபூதியைக் காட்டுகின்றன. கிருஷ்ணன் தனது பிறப்பிற்கு தேர்நதெடுத்த திதி அஷ்டமியாகும். சூரியனுக்கும் சந்திரனுக்கும் உள்ள இடைவெளியே 'திதி' என்று கூறப்படுகிறது. க்ஞானேந்திரியங்களின் வளர்ச்சிக்கு அஷ்டமி திதி உதவுகிறது. காதுகள், உடல், கண்கள், நாக்கு, மூக்கு இவை ஞானேந்திரியங்களாகும். ஆகவே ஸ்திரராசியான ரிஷபத்தில் ரோகிணி நட்சத்திரத்தில் சிம்மம் போன்று ஸிம்ஹ மாசமான ஆவணி மாசத்தில் தனது ஞானேந்திரியங்களுடன் அவதாரம் எடுத்து "பகவத் கீதை" என்ற சிறந்ததொருஞானமிருதத்தை அளித்து பகவான் தனது பரத்வத்தை வெளிப்படுத்தினுன. "அவனே பரன், கண்ணனே மானிட வடிவத்தில் எல்லா பூதங்களையும் — அதாவது தத்துவங்களையும் காப்பாற்றும் மஹேச்வரன்" என்று நாம் அறிய வேண்டும். அவ்வாறு அறியவில்லையென்றுல் நாம மூடர்கள்—அதாவது அறிவில்லாதவர்களாக ஆகிவிடுவோம். இக்கருத்தையே கண்ணனும் பகவத்கீதையின் 9-ஆவது அத்யாயத்தில கூறுவது காண்க :—

अवजानन्ति मा मूढा:
मानुषीं तनुं आश्रितम् ।
परं भावं अजानन्तो
मम भूत महेश्वरम् ॥

[ அவஜாநந்தி மாம் மூடா
மாநுஷீம் தநும் ஆச்ரிதம் |
பரம பாவம அஜாநநதோ
மம பூத மஹேச்வரம் || ]

நம்மாழ்வாரும் கண்ணனே நாராயணன் என்று கூறுவது காணக:

"கண்ணன் கழலிணை
நணணும மனமுடையீா
எண்ணும திருநாமம
திணணம நாரணமே!"

நாராயண நாமத்தை உச்சரிப்பதால கண்ணனது திருவடிகள நமக்கு நிச்சயமாகக் கிட்டும என்று அழகாகக் கூறியுள்ளார். "உணணும் சோறு, பருகும் நீா, தினனும வெற்றிலை எல்லாம் கண்ணன்" என்று ஆழ்ந்து ஆழங்காற்பட்டு அநுபவித்தவர் நம்மாழவார். எல்லா ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தமது நூற்களில் கண்ணனின் பரத்வத்தைத் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளனர். நமது பீஷ்ம பிதாமஹரும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் ஆரம்பத்தில் "தேவகீநந்தந: ஸ்ரஷ்டேதி சக்தி: என்று மஹாவிஷ்ணுவின பூர்ணுவதாரம் ஸ்ரீகிருஷ்ணன் என்று தெளிவாகக் கூறியுள்ளார். அரங்கனை அநுபவிக்க ஆர்வத்துடன வந்த திருப்பாணுழ்வாருக்கும் ஸ்ரீரங்கநாதன் தனது நவநீத கிருஷ்ணனது திருக்கோலத்தைக் காட்டித் தனது திருவடிகளில் சேர்த்துக் கொண்டார் என்று ஸம்ப்ரதாயமறிந்த பெரியோர்கள் கூறுவர்.

திருப்பாணுழ்வார் அருளிச் செய்த 'அமலனுதிபிரான்' என்ற ஒரே நூலில கலி விருத்தத்தில் கடைசிப் பாசுரமாக கண்ணனின் பரத்வத்தை எடுத்துக் காட்டுவதை நாமும் அநுபவிப்போம :—

"கொண்டல் வண்ணனைக் கோவலனுய்
வெண்ணெய்
யுணட வாயன* எனனுள்ளம்
கவாந்தானை*
அண்டர்கோ னணியரஙகன*
எனனமுதினைக
கண்டகண்கள் மறறொன்றினைக
காணவே!"

திருமலையப்பனின் சரணுகதி ஸ்தோத்திரத்தின் கடைசி சலோகத்தின் ஈற்றடியும் கண்ணனின் பரத்வத்தை இவ்வாறு வெளிப்படுத்துகிறது:—

"स्यां किङ्करो वृषगिरीश ! न जातु मह्यम्"

[ ஸ்யாம் கிங்கரோ வ்ருஷகிரீச
நஜாது மஹ்யம் ]

அதாவது "வ்ருஷப ராசியில் ரோஹிணி நட்சத்திரத்தில் அவதரித்த உனக்கே அடிமை செய்து கிடப்பேன. "எனக்கு" என்று ஒன்றும் செய்ய மாட்டேன்."

ஆகவே நமது ஆசார்யா வகுத்த நெறிப்படி கிருஷ்ணனின் பரத்வத்தை உணர்ந்து அவனுக்கே அடிமை செய்து நலம்பல பெறுவோம்.

"ப்ருந்தாரண்ய நிவாஸாய
பலபத்ராநுஜாய ச
ருக்மிணீபராண நாதாய
பார்த்தஸாரதாய மங்களம்" ★

# முருகன்

Dr. S. R. ஜெயவேலு, D.Litt.
சென்னை-5.

அண்ட பிண்ட சராசரங்களிலெல்லாம் வியாபித்திருக்கும் இறைவன் சக்திவடிவானவன். இச் சக்தி பல வகையில் பரிணமித்திருக்கின்றது. ஒலி, ஒளி, காந்தம், மின்சாரம், உஷ்ணம், ஈர்ப்பு, அணுசக்தி, பிராணன், மனம், சித்தம், ஞானம், ஆன்மா (?) முதலிய பலவகை சக்திகளாக இறைவன் இயங்குகிறான். ஒவ்வொரு சக்தியும் ஒவ்வொரு விதமாக இயங்கும் தன்மையுள்ளது. இவற்றுள் ஞான சக்தியையே நாம் முருகன் என்ற பெயரில் வழிபட்டு வருகின்றோம்.

ஆசா பாசக காமக்ரோதாதிகளை அழிக்கவல்லது ஞானம். முருகனின் வேல் இந்த மலமாதிகளை அழிக்கும் எனபதற்கான ஞானச் சின்னமாக விளங்குகிறது. மற்றும் ஞானத்தைத் தரக்கூடியது என்றும் அறிவுறுத்துகின்றது.

முருகன் ஞான சக்தி வடிவானவன். சக்திகளெல்லாம் ஒரே மூலச் சக்தியாம் இறை சக்தியின் இயங்கு நிலையில், பராசக்தி ரூபத்தில், நாம் வணங்கும் சக்தியின் ஒரு கூறுபாடேயான ஞான சக்தியாதலின், முருகனை பராசக்தியின் குழந்தையாக நாம் பாவிக்கிறோம்.

புலன்கள், அந்தக்கரணங்கள், ஒருமித்து இறைவனை தியானித்திருக்கும் நிலையில நம் உணர்வில் இறைவனே (ஈஸ்வரனே) வியாபித்திருக்கிறான். அந்த நிலையிலதான் நமக்கு இறை ஞானம உதிக்கிறது. நாம் இந்த இறை பாவத்தில் (bhava), இறைவனாகவே இருக்கும் இந்த நிலையில், இறைவனுக்கு (ஈசனுக்கு) உபதேசம் செய்தவன் ஞானக் கடவுளாகிய முருகனெனலாம்.

ஞானத்தைப் பெறும் வழிகளைச் சொல்லலாமன்றி, ஞானத்தையே விளக்கிக் கூற முடியாது. தணியா ஆர்வம் பெற்று, பின்னர் சாதனையில் நின்றுதான் ஞானத்தெளிவையும், ஞான அநுபவ உணர்வையும் பெற்றாக வேண்டும்.

இந்த உணர்வு நம்மில் செம்மைபட, நம்மில் (= உடல + மனமாதிகள் + ஆன்மாவுடன் கூடிய நம்மில்), இயங்கும் ஆதார சக்கரங்கள வளமுடன செயல்பட வேண்டும். இந்த ஆதார சக்கரங்களில் முக்கியமானவை ஆறு. அவற்றில இணைந்து ஆறு வகைச் சக்திகளை நம்மில் வளாத்து இறையநுபூதி உணர்வைத் தரவல்லவனாதலின் அறுமுகவன் என்று அவனை அழைக்கிறோம். இந்த அநுபூதி நிலை நமமுடைய முப்பத்தியாறு தத்துவங்களைக் கடந்த நிலையாதலின். "ஆறுரையும் (6 × 6 = 36) நீத்ததன மேல்" நிலையில் இறைவனைக் காண்கிறோம் எனக் கந்தரநுபூதி குறிக்கிறது. "(ஆறுமுகம் + ஆறுமுகம்) + (ஆறுமுகம் + ஆறுமுகம்) + (ஆறுமுகம் + ஆறுமுகம்) என்று பூதி" எனும் திருப்புகழும் இதனையே குறிக்கும்.

இங்கே ஞானம என்பது ஞா தி = அறிகிறான் = அநுபவிக்கிறான் எனப் பொருள்படும்; ஞா = அறி = அநுபவி; ஞானத்தை விளக்க எழுதிக்காட்ட முடியாது. அநுபவித்துத்தான் உணரமுடியும. 'அநு + பவம' என்பது 'மீண்டும் + (உணர்வில்) உணடாவது', எனப் பொருள்படும்.

முருகனிடமிருந்து நாம் பெறும ஞான இன்ப நிலைக்களங்களுக்குத் தக அவனை நாம் ஞானஸ்கந்தன், சுப்ரமணயன், சேந்தன், குமரன், கிழவன், சத்குரு, கந்தன், செவ்வேள் எனப் பல பெயரிட்டு அழைக்கிறோம். ஆனால் இவ்வொவ்வொரு மூர்த்தத்திலும் ஞான சக்தியைக் குறிக்கும் வேல் உடனிருக்கும். ஆகவே தான் அவனை ஞான சக்திதரன் என்றும் அழைக்கிறோம். காஞ்சி, திருத்தணிகை, திருவேரகம் முதலிய தலங்களில் அமைந்துள்ள முருகனின் வேலாயுதம் ஆறு ஆதார ஆதிக்கச செயலாக்கத்தைக் குறிக்கவும், (ஆறு =) வழிப்படுத்துதல் என்பதைக் குறிக்கவும், ஆறு பட்டைகளாக (மூன்று சதுரங்களின் சேர்க்கைக் கொண்டு) திட்டப்பட்டுள்ளது.

முருகன் இயற்கையோடு இயைந்த குறிஞ்சி நிலக் கடவுளாகப் போற்றப்படுகிறான். பண்டைக் காலத்தில், ஆதாரச் சக்கரங்களில் செயல்படுவதைக் குறிக்கும். பாம்பு வழிபாட்டிலிருந்து அறுமுகன் வழிபாடு தோன்றியுள்ளதாகத் தெரிகிறது. உதாரணமாக கர்நாடகாவில் சுப்ரமண்யா, தமிழ நாட்டில் நாகாசலமெனும் திருச்செங்கோடு முதலிய தலங்களில் முருகன் வழிபாட்டைக் கூறலாம். உண்மையில் முருகன் கோயில்களில் பெரும்பாலும் நாகலிங்கைப் ப்ரதிஷ்டையுண்டு.

புராணவாயிலாக சிவனது நெற்றிக் கண்ணிலிருந்து பிறந்த "ஞானங்கொள் பொறிகள் கூடி வானிந்து கதிரிலாத நாடண்டி நமசிவாய வரை

(அடுத்தப் பக்கம் பார்க்க)



வள்ளி தெய்வானையுடன் சுப்ரமண்ய சுவாமி-பழனி.

# கண்ணனே நம் தெய்வம்!

திரு. வெ. சுந்தரம்-பரமக்குடி.

கண்ணன் பிறந்த நன்னாளே ஸ்ரீஜெயந்தி
எண்ணம் நிறைவேற ஏற்றமுடன் தொழுவோமே!
கார்மேகம் பொழிந்த கருணைமா மழையாய்
கார்மேக வண்ணன் காப்பதுவும் உறுதியாமே!

அட்டமிநன்னாளில் ஆவணியில் பிறந்தானை
இட்டமுடன் வணங்கக் கட்டங்கள் திரும்தானே!
முட்டிவரும் துன்பங்கள் பட்டுவிடும்; முரசு
கொட்டிவரும் இன்பங்கள் கண்ணன் அருள்தேனே!

ஆக்கலுக்கும் அழித்தலுக்கும் இடையான
காத்தலையே
நோக்கமாகக் கொண்டான் நேர்த்தியான
இடையனுமே!
ஏக்கமதைப் போக்கும் ஊக்கமிகச் சேர்க்கும்
நோக்கம் பக்தியாலே போக்குவான் துயரினையே!

பாலகனின் பக்திக்குப் பரந்தாமன கற்றூணில்
காலனாக இரண்யனுக்குக் காட்சிதந்த மாட்சியுண்டு,
ஓலமிட்ட யானைக்கும் ஓடிவந்து உதவிட்டான்
ஆலகால நாகத்தை அடக்கிநட மாடினான்.

சிறையில் பிறந்த கண்ணன் பக்திக்கே
சிறைபட்ட தன்மையாம சகாதேவன் சாதனையே!
முறையற்ற நீதிதன்னை மாற்றிவைக்க மாநிலத்தில்
முறைசெய்த நீதியாகும் கீதையின் உபதேசம்.

ஆலிலைமேல் பள்ளி கொண்டான் திருநாளே
கோவினைக்கைக் கொண்ட கோபாலன திருநாளே
குழலூதிக் கோபியரை ஆடவைத்தான் திருநாளே
குழந்தையாய் வந்தானைக் கொண்டாடும் திருநாளே

கலையாடும் எழிலோடு வழிகாட்டும் கண்ணன
அலைபாயும் மனத்திற்கு ஆனந்தம் அளிப்பான
நிலையான இன்பத்தை நிலவிவரச் செய்வான
தலையாய வேதத்தின் தலைவனவன் கண்ணன்

வேய்ங்குழலில் ஏழிசையை விளைவித்த கண்ணன்
ஒய்வின்றி தன்பணிபோல் உழைக்க முறைசெய்தான்
தாய்குலத்து மேன்மைக்குத் துணையாக வேண்டுமென
தொய்வின்றிக் கலைகளாம் பாஞ்சாலிக் களித்தானே!

காடுகளின் மேன்மையால் நாடுதான் வளரும்
பாடுபடும் தொழில்தான் மாடுமிக வாகும்
காடுதனில் ஆநிரையை ஓடிநிதம் மேய்த்தான்
நாடுமவன் செய்கை நலம்நாட வைத்தான்.

காரமேக வணணன் சீர்மிகுநத இதழிரணடும்
நேர்ந்த இசசிவப்பு எதனாலே நேர்ந்ததுவோ?
சீர்[illegible] வெணசங்கை நேர்கொண்டு இதழ்களாலே
[illegible] பரந்தாமன் ஆர்பரித்து ஊதியதாலே!
போ[illegible] சோதரரும் சூழ்நதிருக்கப்
பார்த்தனவன்
தேரிலேதன் [illegible]சத்தைத் தெரிவிக்கக கண்ணனிடம்
நோநதிட்ட கடமைக்கே உருவான போரென்று
கூர்ந்திட்ட கீதையால் கொண்டவாய் சிகப்பேயாம்!

பாற்கடலில் பள்ளிகொணட பத்மநாபன பாதங்கள
நீர்விரித்த செநதாமரை நிறமொத்த தன்மையேன்?
தார்வேந்தன் தருமனுக்கும் துதியனுக்கும்
தூதுசெனறே
சீர்மிக்க செந்நிறமும சோந்ததுவாம் சீரடியில்.

ஆநிறைதான் காக்க கோவிந்தன் அலைந்தே
தேனமாதிஞ் சோலையில் திரிந்து சிவந்தனவாம்
கானத்தேன ஏழிசையை குழலிசையே தானாககி
கானகத்தில் அலைந்த காலடியின் சிவப்பாம.

கணகள காட்டும் வெண்மைமாறி செம்மை
காண்கின்ற தன்மையின் உணமை யாதாமோ?
அண்டிவரு பக்தர்க்கே அருள்தான் நல்கியதால்
கொண்ட வெண்மைமாறி தோன்றும் செம்மையாமே

தேரோட்டி தானாகி தாமபினைப் பிடித்தான்
சீரோட்டச செயலாலே திருக்கரமும் சிவப்பாம
துவாரகை மன்னன் தூயநட்பைக் காட்டிடவே
தவககுசேலன் தாள்பற்றிச் சிறநத சிகப்பாம்.

புள்ளினமும் விலங்கினமும கொல்லாது காத்திடவும்
தெள்ளியநற் செய்கையால் கொள்ளை யின்பமாகும்
அல்லும் பகலும் அறிவுடைநற் செயலாக்கி
வல்லமையே காட்டும் கண்ணனேநம் தெய்வம்

கணணன தொட்ட பணடங்க ளெல்லாம்
வண்ணம் கொண்டு வளாந்த உண்மையாம்
எண்ணம் நிறைந்து ஏற்றிப் பணிந்தால்
வெணணெயாய் உருகி வளம்பெறுவ துணமையாம.

தெய்வமாகி தாசனாகித் தானிருந்த தெய்வம்
தொய்வில்லா பகதிக்குத் துணையாகும் தெயவம
சத்தியத்தின் தெய்வம் நித்யமான தெய்வம்
இத்தரையில் கணகணட கணணனேநம் தெய்வம ★

(முன் பக்கத் தொடர்ச்சி)

யேறி, நாவின்பரசமதாக ஆனந்த அருவி பாய, நாதங்களோடு குலாவி விளையாடி...'' எனும் திருப்புகழ் வசனத்திற்கேற்ப அமைந்த இடம் இமயத்தில கைலையங்கிரியாகும். கங்கையின உபநதிகளில் மநதாகினி, அழகானநதா முதலியனபாயும்கேதாரம், பத்ரிநாத், ருத்ர பிரயாக் முதலிய திவ்ய தேசங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, மற்றும், கார்த்திகைப் பெணகளால் வளர்க்கப்பட டவன்' எனபதால் கார்த்திகேயன் என அழைககப்படும் முருகனது பிறப பிடம் ருத்ரபிரயாகிறகு அருகிலுள்ள கார்த்தோடம் எனக் கூறப்படுகிறது. முருகனிடம் தமிழ்கற்ற அகஸதியர் ஆஸ்ரமும் இங்கு இருப்பதாகக கூறப் படுகிறது. இதுபற்றிக் குமார ஸம்பவத்தில் குறிப்பு உண்டு. கநத ரநுபூதியில் 'மந்தாகினி தநத வரோ தயனே' என்ற குறிபபு காணக. அதே சமயம், வண்மைத்தணிகாசலத்திலும், தெனனகத்திலுளள 'செநதில் வாழ்வாகியே' எனறும் 'கதிரகாம வெற்பிலுறைவோனே' எனறும திருபபுகழில் குறிக்கப்படுவதால் அவனது சாவ வியாபகத தனமை விளங கும.

இத்தகைய ஞானக் கடவுளாம் முருகனை 'என்றுமுளானே மனோகர' எனறும், 'எங்குமுளானே சரவண' என்றும் வாழ்ததி வணங்குவோம.

(என் போதகாசிரியர்களுக்கு சமர்ப்பணம்) ★

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager, T. T. D Press, Tirupati-517501.



*Vice-President*
*Shri Shankar Dayal Sharma*
*Visits Tirumala.*





